# மனதைத் துலக்கும் மகத்தான துஆ

## ஹஜ்–உம்ரா செய்திக் கருவூலம்






அன்பளிப்பு

**RICH FIELD PROPERTIES**

## உம்ரா நிய்யத்

அல்லாஹும்ம இன்னீஉரீதுல் உம்ரத
பயஸ்ஸிர்ஹாலீ வதகப்பல்ஹா மின்னீ.

## தவாப் நிய்யத்

அல்லாஹும்ம இன்னீ உரீது தவாப பய்த்திகல்
ஹராமி ஸப்அத அஷ்வாதின் லில்லாஹித்
தஆலா அஜ்ஜ வஜல்ல ப யஸ்ஸிர்ஹுலீ
வதகப்பல்ஹு மின்னீ.

## ஸஃ நிய்யத்

அல்லாஹும்ம இன்னீ உரீதுஸ் ஸஃய பைனஸ்
ஸப்பா வல்மர்வதி ஸப்அத அஷ்வாதின்
லில்லாஹிதஆலா அஜ்ஜ வஜல்ல பயஸ்ஸிர்ஹுலீ
வதகப்பல்ஹு மின்னீ

## ஹஜ் நிய்யத்

அல்லாஹும்ம இன்னீ உரீதுல் ஹஜ்ஜ
ப யஸ்ஸிர்ஹுலீ வதகப்பல்ஹு மின்னீ.

## மனதைத் துலக்கும் மகத்தான துஆ

தங்களின் புனித ஹஜ் மக்பூலாக அமைய எல்லாம் வல்ல இறைவனிடம் இறைஞ்சுகிறோம்.

**இந்த பொக்கிஷத்தை அன்புடன் வழங்குவோர்**

தூத்துக்குடி மாவட்டம் - ஆத்தூர்

மர்ஹூம் **M.M. சாகுல் ஹமீது** குடும்பத்தார்கள்

ஹாஜியானி **செய்யது பாத்திமா ஹமீது**

ஹாஜி **S.H. முஹம்மது இக்பால்** B.A.,

ஹாஜியானி **வஜிஹா இக்பால்**

ஜனாப் **M.N. முஹம்மது ஆசீப்** B.Tech., M.B.A.,

ஜனாபா **M.I. ரமீஸ் ஆசீப்** M.Com.,

ஜனாப் **M.I. ரசீன் ஹமீத்** B.Com.,

ஜனாப் **M.I. ஜாபர் ஜாவித்** (B.E.)

மாஸ்டர் **M.A. முஹம்மது இஷான்**

மாஸ்டர் **M.N. முஹம்மது ஆக்கீப்**

## ஹஜ்ஜின் பர்ளுகள்

1. இஹ்ராம்
2. அரபாவில் தங்குவது
3. தவாபே ஜியாரா

## உம்ராவின் பர்ளுகள்

1. இஹ்ராம்
2. தவாப்

## ஹஜ்ஜின் வாஜிபுகள்

1. முஜ்தலிபாவில் தங்குதல்
2. ஷைத்தானுக்கு கல் எறிதல்
3. குர்பானி கொடுத்தல்
4. தலைமுடி நீக்குதல்
5. தவாபே ஜியாராவின் ஸஈ செய்தல்
6. தவாபுல் விதா செய்தல்

## உம்ராவின் வாஜிபுகள்

1. ஸஈ செய்தல்
2. தலைமுடி நீக்குதல்

## ஹஜ்ஜு செல்வதற்கு முன்...

1. பரிபூரண ஈமானுடன் எந்தவித ஷிர்க்கும் இல்லாமல் செல்வது.
2. நாயகம் (ஸல்) அவர்களின் சுன்னத்தான வழிமுறைகளை வாழ்க்கை முழுவதும் கொண்டு வருவேன் என்ற நிய்யத்துடன் செல்வது.
3. அல்லாஹ்வுடைய கடமைகளை நிறைவேற்றி செல்வது (தொழுகை, நோன்பு, ஜக்காத்)
4. ஹஜ்ஜுடைய இல்மை கற்று கொண்டு செல்வது.
5. அல்லாஹ்வுடைய தியானத்துடன், நினைவுடன் செல்வது.

6. அல்லாஹ்வுடைய அடியார்களின் கடமைகளை நிறைவேற்றி செல்வது.

7. இக்லாசுடன் செல்வது (எந்தவித புகழையும் விரும்பாமல் செல்வது).

8. தக்வாவுடன் செல்வது.

9. நமது உயிரும், பொருளும், நேரமும் அல்லாஹ்வுக்கு பொருத்தமான முறையில் செலவழிக்க பழகிக் கொள்வது.

10. இம்மைக்கும், மறுமைக்கும் தேவையில்லாதவைகளை விட்டும் தவிர்த்து கொள்ள பழகிக் கொள்வது.

## தக்வா (பயபக்தி) என்றால் என்ன?

அல்லாஹ்வுக்கு முன்பாக கியாமத் நாளில் நிற்க வேண்டுமே என அஞ்சுவது.

வானிலிருந்து இறங்கிய வேதமாகிய திருக்குர்ஆனின் படி அமல் செய்வது.

சிறிது அளவு இரணத்தைக் கொண்டு போதும் என்று மனம் பொருந்திக் கொள்வது.

மிக்க கடினமான இறுதி நாளுக்காக தன்னை தயார்படுத்திக் கொள்வது.

இரு புறங்களிலும் முள் செடிகள் நிறைந்த ஒற்றையடிப் பாதையில் நடக்கும் போது முட்கள் நம் மீது பட்டு விடக்கூடாது என்று எவ்வளவு கவனமாக நடப்போமோ அது போல் தவறுகளுக்குப் பயந்து நடப்பது. இதுவே தக்வா ஆகும்.

## நகரங்களின் தாய்

குர்ஆனில் மக்காவை "உம்முல் குரா" அதாவது நகரங்களின் தாய் என சொல்லப்படுகிறது. (42:7)

## ரஹம் - ஹரம் விளக்கம்:-

ரஹம் - தாய் வயிற்றிற்கு ரஹம் எனப் பெயர். மனிதன் உலகில் பிறக்க தயாராகுமிடம் தாயின் கர்ப்பம் அதாவது ரஹம்

ஹரம் - மனிதன் மறுமைக்கு தன்னை தயார்படுத்திக் கொள்ளும் புனித இடம் பைத்துல்லாஹ் அதாவது ஹரம்.

## தவாப்:-

உலகில் வேறு எங்கும் செயலாற்ற முடியாத புனித ஹரம் ஷரீபில் மட்டுமே செய்யக்கூடிய அற்புத இபாதத் தவாஃப்

ஆகும். நபில் தவாஃப்களுக்கு இஹ்ராம் இல்லை, ரமல் இல்லை, ஸஃ இல்லை. மக்கா முகர்ரமாவிற்குள் நுழைந்தவர் மற்றெந்த வேலையில் ஈடுபடுவதற்கு முன்னர் முதல் வேலையாக ஹரம் ஷரீப் சென்று கஃபாவில் தவாப் செய்வது தான் முதல் கடமை.

## ஹஜ் என்றால் என்ன?

நபி (ஸல்) அவர்களிடம் ஹஜ் என்றால் என்ன? என வினவப்பட்டதற்கு அரஃபா தினத்தில் அரஃபாவில் இஹ்ராமுடன் தரிபடுவது தான் ஹஜ் என்றார்கள்.

## எது சிறந்த ஹஜ்?

ஹஜ் என்ற அரபிச் சொல்லுக்கு நாட்டம், தேட்டம் - சந்திப்பு என்று பொருள்.

அல்லாஹ் மட்டும் உன்னை அறியும் அமல்களைச் செய்வாயாக! மற்றவர் யாரும் உன்னை அறிந்துக் கொள்ளவேண்டும் என்று அமல் செய்யாதே! அதாவது பிரபல்யம் புகழ் நாடாதே, அசலில் இது தான் ஹஜ்.

அல்லாஹ்வை நாடி அவனை அடைவதே இலட்சியம் என்ற உறுதியில் செல்வது தான் ஹஜ் பயணம். அதில் அதிகமாக "திக்ரு" செய்யப்பட்ட ஹஜ் தான் சிறந்த ஹஜ். (அல்லாஹ்வின் திக்ரு தியானம் இல்லாமல் கல்பு ஒளி பெறுவதில்லை)

குர்பானி கொடுத்தும் தல்பியா அதிகமாக முழங்கியும் நிறைவேற்றப்படும் ஹஜ் சிறந்த ஹஜ் ஆகும்.

## தவாபில் கஃபாவை இடது புறமாக சுற்றுகின்றோம் அது ஏன்?

கஃபாவின் தவாபில் இடது புறமாக சுற்றுவதன் காரணம், ஹாஜியின் இருதயம் பைத்துல்லாஹ்வை நெருங்கி இருக்க வேண்டும் - வலது புறமாக சுற்றினால் கல்பு கஃபாவை விட்டு ஒரு சாண் தூரம் தள்ளிப் போகும். அந்த சிறிய அளவு தூரம் கூட ஹாஜி அல்லாஹ்வின் திக்ரு தியானத்தை விட்டு விலகியிருக்கக் கூடாது என்பதே இதன் கருத்தாகும்.

## ஹஜ்ஜுப் பயணத்தில் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள்:

1. முக்கியமாக ஹஜ்ஜுக்காகச் செலவு செய்யப்படும் பொருள் ஹலாலான முறையில் சம்பாதிக்கப்பட்டதாக இருந்திட வேண்டும்.

2. பெருமை, புகழ், உலக நோக்கங்கள் எதுவுமில்லாமல் அல்லாஹ்வுக்காகவே செய்யப்படக் கூடியதாக இருந்திட வேண்டும்.

3. கடனிருந்தால் அதனை கொடுத்திட வேண்டும்.

4. உறவினர்களுடன் பேசாமல் இருந்தாலோ தீங்கு எதுவும் செய்திருந்தாலோ - அவர்களிடம் பேசி - மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவேண்டும்.

5. செய்துவிட்ட பாவங்களுக்காக மனம் வருந்தி தவ்பா செய்திடவேண்டும். இனிமேல் பாவங்கள் செய்யாமல் வாழ உறுதி கொள்ளவேண்டும்.

6. இஹ்ராம் அணிந்த பின் மிக்கப் பேணுதலாகவும் பயபக்தியுடனும் இருந்திட வேண்டும்.

7. இஹ்ராம் அணிந்த நிய்யத்துச் செய்த பின் தல்பியாவைச் சொல்லிக் கொண்டே இருக்கவேண்டும்.

8. இப்புனித பயணத்தில் பிறருக்கு உதவுதல், சகிப்புத் தன்மை, பொறுமை ஆகியவற்றை அதிகம் கடைபிடிக்க வேண்டும்.

9. புனித ஹரம்மில் - ஐந்து நேரமும் ஜமாஅத்துடன் தொழுதல் ஒரு கோடியே முப்பத்தைந்து லட்சம் நன்மைகள் கிடைக்கும் என்பது மார்க்க மேதைகளின் கணிப்பு.

10. பிரயாணத்திலும் - புனித மக்காவிலும் - மதீனாவிலும் குறிப்பிட்ட இடங்களில் ஓதவேண்டிய மஸ்னூன் துஆக்களை ஓதி வர வேண்டும். ‘‘வல்ல இறைவன் - அவனது ஈடில்லா கருணையினால் -

தங்களின் புனித ஹஜ்ஜை ஏற்று, சொர்க்கம் செல்லக் காரணமாக அதனை ஆக்கித் தந்தருள்வானாக. ஆமீன்!"

## கஃபா

கஃபா என்றால் சதுர வடிவமானது என்று பொருள். இதற்கு பைத்துல்ஹரம் என்றும் பெயர் சொல்லப்படும். கருங்கல்லால் கட்டப்பட்ட கஃபாவின் உயரம் 50 அடி, நீளம் 40 அடி, அகலம் 25 அடியாகும். ஒரே நேரத்தில் பல லட்சம் ஹாஜிகளின் வேண்டுதலை பிரித்தரிந்து - அவரவர் தேவைகளை ஒரு தனிநபர் (அல்லாஹ்) நிறைவேற்றி தரும் அற்புதமான இடம் கஃபா ஆகும். முதன் முதலில் ஏமன் நாட்டு மன்னர் துப்பவுஅஸத் என்பவர் கஃபா மீது போர்வை போர்த்தி கவுரவித்தார்.

## ஹஜ்ருல் அஸ்வத்

கஃபாவின் கிழக்கு திசையிலுள்ள ருக்னுல் ஹிந்த் அதாவது இந்திய மூலையில் பதிக்கப்பட்ட சுவர்க்கக் கல்லின் பெயர் தான் "ஹஜ்ருல் அஸ்வத்."

பாவா ஆதம் (அலை) அவர்கள் தான் சுவனத்திலிருந்து தன்னுடன் ஹஜ்ருல் அஸ்வத் கல்லை கொண்டு வந்தார்கள்.

ஹஜ்ருல் அஸ்வத்தை தொட்டு முத்தமிடுவது - அல்லாஹ்வுடன் முஸாபஹ் செய்வதற்கு சமமாகும்.

## ஜம் ஜம் கிணறு

இது மக்காவின் கஃபாவுக்கும் அருகில் உள்ள சிறப்பான கிணறாகும். 'ஜம் ஜம்' என்றால் அதிகம் என்று பொருள். பூமியிலுள்ள நீர்களில் மிகச் சிறந்தது "ஜம்

ஜம்" நீராகும். ஜம் ஜம் எதற்காக குடிக்கப்படுகிறதோ அதற்குரியதாகும் - என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## ஸஃபா - மர்வா

இது கஃபாவுக்கு அருகில் உள்ள இரு குன்றுகளின் பெயர்களாகும். "நிச்சயமாக ஸஃபாவும், மர்வாவும் அல்லாஹ்வுடைய அடையாளச் சின்னங்களில் உள்ளவையாகும்" (2:158). ஸஃபா - மர்வா என்பது சுவர்க்கத்தின் இரு வாசல்களாகும்.

## மினா

மக்காவிற்கு கிழக்கே 5 மைல் தூரத்தில் அரபாத் செல்லும் வழியில் உள்ள ஊருக்குப் பெயர் "மினாவாகும்". மினா என்றால் விருப்பும் என்று பொருள். இங்கு

தான் ஆதம் நபி (அலை) அவர்கள் சுவனம் மீள விரும்பியதன் காரணமாக இவ்விடத்திற்கு இந்தப் பெயர் ஏற்பட்டது. நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் தங்கள் மகன் நபி இஸ்மாயீல் (அலை) அவர்கள் அறுத்து பலியிட முயற்சித்த இடமும் இதுதான்.

## அரஃபா

மக்காவிற்கு கிழக்கே 12 கல் தொலைவில் உள்ள மலைக்கும், அதைச் சுற்றியுள்ள மைதானத்துக்கும் சொல்லப்படும் பெயர் அரஃபாவாகும். அரஃபா என்றால் ஒருவரையொருவர் அறிந்து கொள்ளுதல் என்று பொருள். அரஃபா மைதானம் சுமார் 8 மைல் நீளமும், 4 மைல் அகலமும் கொண்டதாகும். அரஃபாவில் கேட்கப்படும் துஆக்கள் உடனே அல்லாஹ்விடம்

ஏற்றுக் கொள்ளப்படும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## ஹஜ்ஜுல் அக்பர்

அரஃபா நாள் வெள்ளிக்கிழமை வந்துவிட்டால் அதற்கு "ஹஜ்ஜுல் அக்பர்" என்று சொல்லப்படுகிறது. அது 70 ஹஜ்ஜுக்கு சமமாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## முஸ்தலிஃபா

முஸ்தலிஃபா என்பது மினாவுக்கும், அரஃபாத்துக்கும் இடையில் உள்ள ஒரு இடமாகும். நீங்கள் அரஃபாவிலிருந்து திரும்பினால் "மஷ் அருள் ஹரம்" என்னும் இடத்தில் அல்லாஹ்வை திக்ரு செய்யுங்கள்" (2:198) என்று குர்ஆனில் சொல்லப்பட்ட இடம் முஸ்தலிஃபாவாகும்.

முஜ்தலிஃபாவில் உள்ள பள்ளிவாசலுக்கு பெயர் தான் ''மஷ் அருள் ஹரம்'' ஆகும். முஸ்தலிஃபாவின் இரவு புனித மிக்க ''லைலத்துல் கத்ரு'' இரவை விடச் சிறந்தது என்று கூறப்படுகிறது.

## மஸ்ஜிதுந் நபவி

மஸ்ஜிதுந் நபவி என்றால் ''நபியின் பள்ளிவாசல் என்று பொருள்'' நபி (ஸல்) அவர்கள் தங்களின் 53-ஆம் வயதில் (கி.பி. 623ஆம் ஆண்டு) மக்காவிலிருந்து மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்து வந்தார்கள். அப்போது அவர்கள் ஏறி வந்த அல்கஸ்வா என்னும் ஒட்டகை மதீனாவில் நுழைந்ததும் முதன் முறையாக இந்த இடத்தில் தான் அமர்ந்தது. அந்த இடத்தில் நபி (ஸல்) அவர்கள் ஒரு பள்ளிவாசலைக் கட்டினார்கள். அதற்கு பெயர் தான் 'மஸ்ஜிதுந் நபவி'. மஸ்ஜிதுந் நபவியின்

'மினாரா' தான் 'உலகின் முதல் மினாரா' ஆகும்.

## மதீனா முனவ்வராவிற்குள்ள சங்கைகளும் - சிறப்புகளும்

1. அல்லாஹுத்த ஆலா தன்னுடைய ஹபீப் முஹம்மது (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்து கியாமத்து நாள் வரை தங்குவதற்காக தேர்ந்தெடுத்த பரிசுத்த நகரம் தான் மதீனாவாகும்.

2. உலகிலுள்ள மற்ற நகரங்கள் எல்லாம் வாளால் வெற்றி கொள்ளப் பட்டவை. ஆனால் மதீனா தய்யிபாவோ திருக்குர் ஆனினால் வெற்றி கொள்ளப் பட்டது.

3. தீனுல் இஸ்லாம் இங்கிருந்து தான் உலகெங்கும் பரவியது.

4. மதீனாவின் தூசியும், ஸயீப் என்ற மண்ணும் குஷ்ட ரோகம் போன்ற கொடிய

வியாதிகளையும் நீக்கும் அருமருந்தாகும்.

5. நபி (ஸல்) அவர்கள் கியாமத்து நாள் வரை இங்கு தான் சயனிக்கிறார்கள். அன்னாரின் உடலோடு ஒட்டியுள்ள மண் அர்ஷைக் காட்டிலும் சிறந்தது.

6. நபி (ஸல்) அவர்களின் பாதங்கள் படாத இடமே மதீனாவில் கிடையாது.

7. ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் பல்லாயிரம் முறை வருகை தந்த பரிசுத்த நகரம்.

8. இது குர்ஆன் இறங்கிய புனித இடம். தீனின் பல முக்கிய கட்டளைகள் அமல்படுத்தப்பட்ட புண்ணிய பூமி மதினாவாகும்.

9. இங்கு தினமும் காலை எழுபதாயிரம் மலக்குகளும் மாலையில் எழுபதாயிரம் மலக்குகளும் இறங்குகின்றனர்.

10. சுவனத்தில் ரஹ்மத் இறங்குவதை போல் - மதீனாவிலும் ரஹ்மத்தும் பரக்கத்தும் சதாவும் பொழிந்து கொண்டிருக்கின்றன.

11. சுவனத்தின் பூங்காவான ரவ்ளதுல் ஜன்னா இங்குள்ளது.

12. சுவனத்தின் மலை உஹதும் இங்குள்ளது.

13. இங்கு செய்யப்படும் அமல்களுக்கு 50,000 மடங்கு அதிக நன்மைகள் கிடைக்கின்றன.

14. நபி (ஸல்) அவர்கள் கட்டிய இரண்டு மஸ்ஜிதுகள் இங்குள்ளன.

15. கடைசி காலத்தில் தஜ்ஜால் மதீனாவில் நுழையமாட்டான். ஜன்னத்துல் பகீஃயில் அடக்கமாகுபவர்களுக்காக நபி (ஸல்)

அவர்களின் சிபாரிசு கிடைக்கும். தீனுக்கு பல வெற்றிகள் கிடைத்த புனித நகரம் மதீனாவாகும். (இன்னும் பல சிறப்புகள் உள்ளது. இந்த நூல் சிறியதாக இருப்பதால் சுருக்கமாகப் போட்டுள்ளோம்).

## மனிதனின் மூளைக்கு எட்டாத சில அற்புதங்கள்

ஹரம் ஷெரிபில் 1430 வருடங்களாக பர்ளு தொழுகையின் நேரம் போக மீதி நேரங்களில் இரவு பகலாக ஒரு நிமிட நேரமும் விடுபடாமல் தொடர்ந்து தவாப் நடைபெறுவது உலக அற்புதமே. (1446ஆம் ஆண்டில் ஏற்பட்ட வெள்ள பெருக்கிலும் - வெள்ளத்தில் நீந்திக் கொண்டு ஹாஜிகள் தவாப் செய்தனர்)

சில மணி நேரங்களில் - ஏறத்தாழ 40

லட்சம் ஹாஜிகள் கொண்ட ஒரு நல்லடியார்களின் கூட்டத்தால் அரஃபாத்தில் திடீர் நகரமே உருவாகிவிடுகிறது. இதுவும் அற்புதமே.

மினாவில் - 5 நாட்கள் தங்குவதற்காக எல்லா பொருட்களும் கிடைக்கக்கூடிய ஒரு பெரிய பட்டணமே உருவாகிவிடுகிறது. இதுவும் அற்புதமே.

ஆறு அடி அகலமுள்ள ஜம்ஜம் கிணற்றிலிருந்து சுமார் 40 - 50 லட்சம் ஹாஜிகள் தண்ணீர் பருகுகிறார்கள். கேனிலும் - டின்னிலும் நிரப்பி செல்கிறார் கள் - இருந்தபோதிலும் ஜம்ஜம் கிணற்றுநீர் ஒரு அங்குலம் கூட குறைந்ததில்லை. பல ஆயிரம் ஆண்டுகள் ஆன பிறகும் இன்றுவரை வற்றிப் போனதுமில்லை. மழையே பெய்யாத, ஆறுகளோ -

குளங்களோ இல்லாத பாலைவனத்திற்கு மத்தியில் ஜம்ஜம் நீர் வெளிப்படுவதும் அல்லாஹ்வின் மிகப்பெரிய அற்புதமே.

ஷைத்தானுக்கு கல்லெறிய முஜ்தலிபாவிலிருந்து 1430 ஆண்டுகளாக பல லட்சம் ஹாஜிகள் பொடிக்கற்களை எடுத்துக் கொண்டே இருக்கின்றனர் கற்களும் வந்து கொண்டே இருக்கிறது. (அந்த இடத்தில் சிறு பள்ளம் கூட விழுவது இல்லை) இதுவும் ஒரு அற்புதமே.

ஜம்ரத் சைத்தான்களுக்கு ஹாஜிகளால் எறியப்படும் கற்கள் கணக்கிடப்பட்டுப் பார்த்தால் மலைபோல் குவிந்திருக்க வேண்டும். ஆனால் சிறு குன்றுபோல் கூட ஆவதில்லை. இதுவும் ஒரு அற்புதமே! (இதனால் மக்பூலான ஹஜ்ஜைப் பெற்ற ஹாஜிகள் எறியும் கற்கள் மலக்குகளால்

மேலே உயர்த்தப்படுகிறது என்ற உண்மை புலனாகிறது.)

பல இலட்சக்கணக்கான ஹாஜிகள் ஒன்றிரண்டு நாட்களிலேயே ஹஜ்ஜின் முக்கிய கடமைகளில் ஒன்றான தவாபு ஸ்ஸியாராவை நிறைவேற்றுகின்றனர்.

கஃபாவைச் சுற்றி அமைந்துள்ள மதாஃப் எனும் தவாப் சுற்றுமிடம் அத்தனை இலட்சம் மக்கள் ஓரிரு நாளில் சுற்றும் அளவுக்குப் பெரிதல்ல. அங்கு கண்ணுக்குத் தெரியாத ஒரு விரிவாக்கம் நடைபெறுகிறது. இதுவும் ஓர் அற்புதமே.

பல இலட்சக்கணக்கான ஹாஜிகள் பரகத்தைக் கருதி கஅபாவைத் தொட்டுத் தடவுகின்றனர். எனினும் அது அழுக்குப் படிவதில்லை. அதன் நறுமணம் குறைவதும் இல்லை. இதுவும் ஓர் அற்புதமே.

## மஸ்ஜிதுல் ஹரமில் - ஜனாஸா தொழுகைக்கு கிடைக்கும் நன்மைகள்

ஹரமில் ஒரு ஜனாஸா தொழுகையில் கலந்து கொள்பவருக்கு 3 கீராத் நன்மைகள் கிடைக்கும் என்று ஹதீஸில் சொல்லப் பட்டுள்ளது. ஒரு கீராத் என்பது உஹது மலைக்கு சமமானது. ஹரமில் ஆற்றப்படும் அமல்கள் அனைத்தும் ஒரு இலட்சம் நன்மைகளாக பெருகிவிடு கின்றன. இதன்படி ஹரமில் தொழும் ஒரு ஜனாஸா தொழுகைக்கு 3 லட்ச உஹது மலை அளவு நன்மைகள் கிடைக்கிறது.

## ஹரம் எல்கையை நிர்ணயம் செய்தது எப்படி?

ஹஜ்ருல் அஸ்வத் சுவனத்திலிருந்து வந்த போது மிக்க பிரகாசமாக இருந்தது.

நூஹ் (அலை) காலத்து பிரளயத்திற்கு பிறகு அது அபூகுபைஸ் மலை மீது இருந்தது. ஹஜ்ருல் அஸ்வத்தின் ஒளி எதுவரை சென்றதோ அதனை ஹரம் எல்லையாக ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை) அறிவித்துத் தர நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் நிர்ணயித்தார்கள்.

## ஹஜ் சம்பந்தமான சில அரபி சொற்களும் - அதன் பொருளும்

1. இஹ்ராம் - இது ஹஜ் - உம்ராவில் பர்ளான அமல்.

2. மஸ்ஜிதுல் ஹரம் - பரிசுத்தமான மஸ்ஜிது - கஃபாவை சுற்றியுள்ள பள்ளிவாசல்.

3. முஹ்ரிம் - இஹ்ராம் கட்டியவர்.

4. மீகாத் - இஹ்ராம் கட்டுவதற்கான எல்லை

5. ஹில், ஹில்லி - மீகாத் எல்லைக்கும் - ஹரம் எல்லைக்கும் இடைப்பட்ட பகுதிக்கு ஹில் எனப்படும் - அங்கு வசிப்பவர் ஹில்லி எனப்படுவார்.

6. தவாப் - கஃபாவை 7 தடவை சுற்றுவதற்குள்ள பெயர்.

7. மதாப் - தவாப் செய்யப்படும் இடம்.

8. ஜம்ராத் - ஷைத்தான்களுக்கு கல்லெறியும் இடம்.

9. ரவ்ளத்துல் ஜன்னா - இது மஸ்ஜிதுத் நபவியில் உள்ள சுவர்க்கப் பூங்கா.

10. வகூப் - அரபாத் - முஜ்தலிபாவில் தங்குதலுக்குரிய பெயர்.

11. இஸ்திலாம் - ஹஜ்ருல் அஸ்வத்திற்கு முத்தமிடுவதற்கு பதிலாக - கையால் சைகையால் முத்தமிடுவதற்குரிய பெயர்.

12. ரமல் - தவாப் செய்யும் போது முதல்

மூன்று சுற்றுகளில் ஆண்கள் மட்டும் லேசாக தோளை குலுக்கிக் கொண்டு மெதுவாக ஓடுவதற்கு பெயர்.

13. இழ்திபா - தவாப் செய்யும் போது ஆண்கள் வலது தோள்பட்டை திறந்தும் இடது தோள்பட்டை மூடிய நிலையில் செய்து கொள்வதற்குப் பெயர்.

14. ஹலக் - தலை முடியை அகற்றுவது

15.ஷவ்த் - தவாபின் ஒரு சுற்றிற்குள்ள பெயர், அஷ்வாத் - சுற்றுகளுக்குள்ள பெயர் (Plurals)

16. கிஸ்வா - கஃபாவின் கருப்பு போர்வைக்குரிய பெயர்.

## ஷைத்தானை வெல்வோம்.

ஷைத்தான் தன் தலையில் மண்ணை வாரிப் போட்ட 3 சந்தர்ப்பங்கள். 1. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவ்வுலகில்

அவதரித்த போது, மடமை இருளில் மூழ்கியிருந்த உலகம் - மெஞ்ஞான ஒளியால் வெளிச்சம் பெறப் போகிறதே என்று புலம்பி அழுது தன் தலையில் மண்ணை வாரிப் போட்டு கொண்டுடான்.

2. சூரத்துல் ஃபாத்திஹா இறங்கிய போது, இதனால் மனிதர்கள் நேர்வழியில் சென்று விடுவார்களே என்று எண்ணி தன் தலையில் மண்ணை போட்டுக் கொண்டான்.

3. அரஃபா மைதானத்தில் ஹாஜிகள் உள்ளம் உருகி, நெஞ்சம் கரைந்து, கண்ணிலிருந்து கண்ணீர் கரை புரண்டோட கதறி கதறி கேட்கும் துஆக்களின் மூலம் வள்ளல் பெருந்தகை அல்லாஹ்வால் பாவங்கள் கரைந்தோடு வதை கண்டு மனம் பொறுக்காமல் தன் தலையில் மண்ணை வாரிப் போடுவான்.

எனவே புனித மிக்க ஹஜ்ஜை நிறைவேற்ற

வந்திருக்கும் ஹாஜிகளே - ஷைத்தானை வெல்ல, பொறுமை - சகிப்புத் தன்மை - விட்டு கொடுத்தல் ஆகியவற்றை கடைப்பிடித்து ஷைத்தானை வென்று அல்லாஹ்வை அருட்பெரும் பாக்கியங்களை பொறுவோமாக.

## ஹஜ் முடிந்த பின்பு ஹாஜியாக வாழ்வது எவ்வாறு?

ஹாஜி தீனின் உண்மையான மனிதனாக மக்களுக்கு ஓர் உன்னத எடுத்துக்காட்டாக விளங்கவேண்டும். அவருடைய தனிப்பட்ட வாழ்க்கையிலும் பொது வாழ்க்கையிலும் பரிசுத்தத் தன்மை மிளிரவேண்டும். அநியாய அட்டூழியத்திலிருந்தும் ஹராமான விஷயத்திலிருந்தும் விலகியிருக்கவேண்டும். ஹாஜிகளுடைய செயல்களால் ஈமான் புதுமை பெறவேண்டும்.

ஹாஜிகளுடைய சொற்களால் மறுமை நினைவூட்டப்படவேண்டும். மொத்தத்தில் சத்திய சன்மார்க்கத்தின் உண்மை மனிதர்களாக ஹாஜிகள் வாழவேண்டும்.

**சுவர்க்கத்தில் இருக்கும் புனிதங்கள் இப்புவியில் இருப்பதாக சொல்லப்படுபவை.**

ஹஜ்ருல் அஸ்வத், உஹது மலை, அஜ்வா என்னும் பேரீத்தம் கனி, அர்ஸ் கிணற்றுநீர், ஸஃபா - மர்வா (இது சுவனத்தின் இரு வாசல்களாகும்)

## ஹாஜிகளுக்கு அல்லாஹ் அளிக்கும் கண்ணியம்:-

மக்பூலாக ஹஜ்ஜைப் பெற்ற ஹாஜி 400 நபர்களுக்காக சிபாரிசு செய்து சுவர்க்கம் அழைத்துச் செல்ல உதவும் கண்ணியம் கிடைக்கிறது.

ஹாஜி தன் பாவங்களிலிருந்து பரிசுத்தமாகி தாய் வயிற்றிலிருந்து அன்று பிறந்த பாலகனைப் போன்று ஆகிவிடும் கண்ணியம் கிடைக்கிறது.

ஹாஜி ஒப்புக் கொள்ளப்படும் துஆவுடையவராகி விடுகிறார். ஹஜ்ஜு செய்பவரும் உம்ரா செய்பவரும் அல்லாஹ்வின் விருந்தினர் ஆகிறார்கள்.

ஹாஜி செல்வ சீமானாக வாழ்வார். ஏனென்றால் "ஹாஜி ஒருக்காலும் ஏழை ஆகமாட்டார்" என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

பெண்கள் கவனிக்க வேண்டியவை:

ஜமாஅத்தாக தொழுவது - ஜனாஸா
தொழுகை - ஜும்ஆ தொழுகை
கஃபாவில் மட்டும் தான் உள்ளது

# தல்பியா

لَبَّيْكَ ۝ اَللّٰهُمَّ لَبَّيْكَ ۝

لَبَّيْكَ لَا شَرِيْكَ لَكَ لَبَّيْكَ ۝ إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ

وَالْمُلْكَ لَا شَرِيْكَ لَكَ ۝

லப்பைக் அல்லாஹும்ம லப்பைக்

லப்பைக் லாஷரீக்கலக்க லப்பைக்

இன்னல்ஹம்த வன்னிஃமத்த

லகவல்முல்க் லாஷரீக்க லக்

# மனதைத் துலக்கும் மகத்தான துஆ!

(ஹஜ்ஜு கால சிறப்பு பிரார்த்தனை)

**ஹஜ்ஜில் எல்லா இடங்களிலும் இந்த துஆவை கேட்கலாம்.**

நம்பிக்கை கொண்டோரே! பொறுமையுடனும், தொழுகையுடனும் (இறைவனிடம்) உதவி தேடுங்கள். நிச்சயமாக! அல்லாஹ் பொறுமையுடையவர்களுடன் இருக்கின்றான். அல்குர்ஆன் (2:153)

வணக்கங்களில் தலையானது (துஆ) பிரார்த்தனையாக இருக்கும்.

நபி (ஸல்) கூறுகிறார்கள் :

அல்லாஹு தஆலா உங்கள் மீது ஹஜ்ஜைக் கடமையாக்கி உள்ளான். எனவே நீங்கள் ஹஜ்ஜு செய்யுங்கள்

– நூல் : முஸ்லிம்

தொகுப்பு : **அஷ்ஷரீ அத்துல் இஸ்லாமியா**
சென்னை – 108, செல்: 93833 67005
ஆத்தூர்: ஹாஜி **S.H. முஹம்மது இக்பால்**

## கஃபத்துல்லாஹ் மீது முதல் பார்வை

கஃபத்துல்லாஹ்வை முதல்பார்வையாக பார்த்தவுடன் கேட்கும் துஆ எதுவானாலும் அது ஏற்றுக் கொள்ளப்படுகிறது. எனவே கீழ்கண்ட துஆக்களை கேட்டு பயனடைவோமாக.

1. யா அல்லாஹ்! என் வாழ்நாளில் நான் உன்னிடம் கேட்கும் ஹலாலான துஆக்கள் அனைத்தையும் கபூல் செய்வாயாக!

2. யா அல்லாஹ்! எங்கள் நபி (ஸல்) அவர்கள் உன்னிடம் கேட்டுப் பெற்ற அருட்பாக்கியங்கள் அனைத்தையும் எங்களுக்கும் அருள்வாயாக.

3. யா அல்லாஹ்! ஒவ்வொருவருடமும் உன் இல்லத்திற்கு வந்து ஹஜ்ஜு செய்யும் பாக்கியத்தை எங்களுக்கு அருள்வாயாக!

4. யா அல்லாஹ்! எங்களுக்கு நல்ல எண்ணங்களை எண்ணும் மனதையும் – உன்னை துதி பாடும் நாவையும் – பாவங்களுக்கு (அஞ்சி) நடக்கும் வாழ்வையும் தந்து அருள் புரிவாயாக!

துஆ அங்கீகரிக்கப்படும் சங்கையான இடங்கள் : (மக்காவில்)

1. கஃபாஷரீபின் மீது முதல்பார்வை படும் போது,

2. முதாஃப் அதாவது பைத்துல்லாஹ்வை தவாப் செய்யுமிடம், குறிப்பாக தவாப் செய்யும் போது,

3. முல்தஜிம், 4. மிஜாபே ர்ஹ்மத்தின் கீழ்

5. கஃபத்துல்லாவின் உள்புறம் (ஹதீம் உள்ளே)

6. இறை இல்லத்தின் உள்ளே,

7. மகாமே இப்ராஹீமிற்கு அருகில்,

8. ''ஜம்ஜம்'' கிணற்றுக்கு அருகில்,

9. ஸபா மலையில்.

10. மர்வா மலையில்,

11. ஸபா–மர்வாவுக் கிடையில் ''ஸஈ'' செய்யும் போது

12. பச்சைக்கோடுகளுக்கு (விளக்கு) இடையே,

13. மினாவில்,

14. அரபாத்தில்,

15. முஜ்தலிபாவில்

16. ஜம்ரதுல் ஊலா (சைத்தானுக்கு கல் எறியும் 3 இடங்களில்)

**துஆ அங்கீகரிக்கப்படும் சங்கையான இடங்கள் (மதீனாவில்)**

1. மதீனா நகருக்குள் நுழையும் போது

2. மதீனாவில் பச்சை கும்பஸ் பார்தத உடன்

3. ரவ்ளத்துல் ஜன்னா– **மஸ்ஜிதுந் நபவி**

4. ரவ்ளத்துல் ஜன்னாவில் உள்ள 6 தூண்கள்

5. ரவ்ளா ஷரீபில் உள்ள மிம்பர்படியின் முன்

6. ரசூல் (ஸல்) மிஃராப்

7. ரவ்ளா ஷரீப் முன் 8. ஜன்னத்துல் பஃகி

9. உஹது மலை 10. மஸ்ஜிதே குஃபா

11. பீரே அரீஸ் (மஸ்ஜிதே கிப்லாதைன் எதிரில் உள்ள கிணறு)

12. மஸ்ஜிதே கிப்லதைன்

13. மஸ்ஜிதே ஜும்மா

14. மஸ்ஜிதே நுமாமா.

15. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் கப்ரு ஷரீபிற்கு அருகாமையில்.

**ஜம் ஜம் நீரில் உள்ள நோய் தீரும் மூலப் பொருட்கள்**

1. மக்னீசியம் சல்பேட்
2. சோடியம் சல்பேட்
3. சோடியம் குளோரைடு
4. கால்சியம் கார்போஹைட்ரேட்
5. பொட்டாஷியம் நைட்ரேட்
6. ஹைட்ரஜன் சல்பேட்

மேற்கூறப்பட்ட இத்தனை மருந்துகள் மட்டுமல்ல. மனிதனின் அறிவுக்கெட்டாத இன்னும் பல அற்புதத் தன்மைகள் அதில் உள்ளன.

**ஹஜ் செய்வது எவ்வாறு?**

ஹஜ் என்பது 4 இடங்களில் 6 நாட்களில்

செய்யப்படும் 10 அமல்கள் அடங்கியதாகும். ஹஜ் 3 பர்ளுகளும் 6 வாஜிபுகளும் சேர்ந்ததாகும்.

## ஹஜ் நிறைவேறும் 4 இடங்கள்

1. மக்கா முகர்ரமாவும் – பைத்துல்லாஹ்வும்

2. மினா, 3. முஸ்தலிபா, 4. அரஃபாத்

## ஹஜ்ஜின் பர்ளுகள்

ஹஜ்ஜின் பர்ளுகள் மூன்று 1. இஹ்ராம், 2. அரஃபாவில் தங்குதல், 3. தவாபு ஜியாரத் செய்வது.

## ஹஜ்ஜின் வாஜிபுகள் (ஆறு)

1. முஸ்தலிபாவில் தங்குதல், 2. சைத்தான்களுக்கு கல் எறிதல், 3. குர்பானி கொடுத்தல், 4. தலை முடியை களைதல், 5. ஹஜ்ஜின் ஸஈ செய்தல், 6. தவாபுல் விதா செய்தல்



## இஸ்திஃபார்

அஸ்தஃபிருல்லாஹல் அளீம் ( 3தடவை) அல்கரீமல் கதீமல்லதீ லா இலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூமு மின்குல்லி தன்பின் வகதீஅத்தின் வஅதூபு இலைஹி வஅஸ்அலுஹுத் தவ்பா

**இந்த துஆவை ஓர்மையுடனும் உள்ளச்சத்துடனும் மனமுருகி கேட்கப்பட வேண்டும். இரண்டு ரக்அத்துகள் தொழுது, நூறு முறை இஸ்திஃபார் செய்து துஆவில் ஈடுபடலாம்.**

## துஆவின் சிறப்புகள்:

நாம் கேட்பதை நிறைவேற்றித்தர வல்ல இறைவனிடம் இறைஞ்சுவதே துஆ என்கிறோம். இபாதத்துகளுக்கெல்லாம் மூளை துஆ-வாகும். சுவனத்தில் ஒரே ஒரு இபாதத் மீதமிருக்கும் அதுதான் துஆ. சுவர்க்கவாசிகள் அல்லாஹ்விடம் துஆவின் மூலமாக கேட்டு கேட்டு பெற்று மகிழ்வார்கள். அந்த துஆதான் அரபாத்தின் முக்கிய இபாதத் ஆகும். எவருக்கு துஆவின் கதவு திறந்து கொள்ளும். எவருக்கு ரஹ்மத்தின் கதவு திறந்து கொள்ளுமோ அவருக்கு சொர்க்கத்தின் கதவு திறந்து கொள்ளும். எனவே ஹாஜிகள் அரபாத்தில் சிறிதும் களைப்போ – சலிப்போ அடையாமல் – வல்ல அல்லாஹ்விடம் (இறைஞ்சி) துஆக் கேட்டு – பாவங்கள் களையப்பட்டு – ஜன்னத்துல் பிர்தவ்ஸ் என்னும் சுவனம் செல்ல வல்ல இறைவன் அருள் புரிவானாக.

## துஆவின் விளக்கம்:

“துஆ” என்பது முஃமினின் ஆயுதம், தீனின் தூண், விண்ணுக்கும்–மண்ணுக்கும் ஒளி, முஸ்லீம்களுக்கு கிடைத்த மாபெரும் செல்வம். துஆ இம்மை–மறுமையில் சகல தேவைகளையும் பெற்றுத்தரும் மூலமந்திரம். வல்ல இறைவனின் வளமான அருட் கொடைகளை அடைந்து கொள்ள அரிய பரிகார வழியாகும்.

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

அல்ஹம்து லில்லாஹி ரப்பில்

ஆலமீன்! அல்லாஹும்ம ஸல்லி அலா ரசூலிக்க செய்யிதினா வநபிய்யினா வ மௌலானா முஹம்மதின் வ அலா ஆலி செய்யிதினா முஹம்மதின் வ பாரிக் வஸல்லிம் அலைஹி !

யா அல்லாஹ் ! கிருபையாளனே! உன்னுடைய அருளால்! கிருபையால்! கருணையால்! தயாள குணத்தால்! அருட்பெரும் கொடையால்! எங்களின் துஆக்களை ஏற்றுக் கொள்வாயாக!

**விண்ணையும்-மண்ணையும் படைத்தவனே!** யா அல்லாஹ்!

உன் திருப்பெயரின் பரக்கத் எங்களின் உயிரின் மீதும் தீனின் மீதும் உண்டாவதாக! யா அல்லாஹ் உன் திருப்பெயரின் பரக்கத் எங்களின் குடும்பத்தினர் மீதும், செல்வத்தின் மீதும் உண்டாவதாக!

**கண்ணியமும் மகத்துவமும் உள்ளவனே!** யா அல்லாஹ்! உன் திருப்பெயரின் பரக்கத் நீ எங்களுக்கு வழங்கிய ஒவ்வொன்றின் மீதும் உண்டாவதாக!

**மகத்தான அர்ஷின் இரட்சகனே!** யா அல்லாஹ்! பெயர்களில் சிறந்த உனது திருப்பெயரால்

துவங்குகிறேன். யா அல்லாஹ்! எந்த அல்லாஹ்வின் பெயருடன் எந்த நோயும் இடர் செய்யாதோ அந்த அல்லாஹ்வாகிய மேன்மை தங்கிய உனது திருப்பெயரால் தொடங்கு கின்றேன்.

**வேதத்தை இறக்கி வைத்தவனே!** யா அல்லாஹ்! நபி இபுறாஹிம் (அலை) அவர்களின் மீதும் அவர்களுடைய குடும்பத்தினர் மீதும் நீ ஸலவாத்து கூறியது போல் நபி முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீதும் நீ ஸலவாத்துச் சொல்வாயாக!

**ஈருலகிலும் விசேஷ அன்பு செலுத்துபவனே !** யா அல்லாஹ்! நபி இபுராஹிம் (அலை) அவர்களின் மீதும் அவர்களின் குடும்பத்தினர் மீதும் நீ பரக்கத்து செய்ததுபோல், முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீதும் பரக்கத்து செய்வாயாக!

யா அல்லாஹ்! எங்களுக்குப் பாவா ஆதம் (அலை) அவர்களைப் போல் தவ்பாவை நஸீபாக்கி அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் யாஃகூப் (அலை) அவர்களைப் போல் இறைஞ்சுதலைத் தந்து அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் யூசுப் (அலை) அவர்களைப் போல் அழகு தந்து அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களுக்குப் போல் நட்பு அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் அய்யூப் (அலை) அவர்களுக்குத் தந்தது போல் பொறுமையைத் தந்து எங்களுக்கு அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் நூஹ் (அலை) அவர்களைப் போல் நீண்ட ஆயுளை நல் ஆரோக்கியத்துடன் தந்து அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களைப் போல் எங்களுக்கு

மேன்மையான அமல்கள் செய்ய அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களைப் போல் சத்தியத்தை எங்களுக்குத் தந்து அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களைப் போல் உணர்ச்சிகளை எங்களுக்குத தந்து அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் உஸ்மான் (ரலி) அவர்கள் வெட்கத்தை எங்களுக்குத் தந்து அருள் செய்வாயாக!

ஹஜ்ரத் அலி (ரலி) அவர்களைப் போல் வீரத்தைத் தந்து அருள் செய்வாயாக!

யா அல்லாஹ்! எங்களையும்

எங்கள் சந்ததிகளையும் தொழுகையை நிலை நிறுத்துபவர்களாக ஆக்கி அருள்புரிவாயாக!

யா அல்லாஹ்! எங்கள் துணை களையும் சந்ததிகளையும் எங்களுக்கு கண்குளிர்ச்சியாக்கி தந்தருள்வாயாக! மேலும் (பரிசுத்தமான) தூய்மையான வர்களுக்கு வழிகாட்டியாகவும் எங்களை நீ ஆக்கி அருள்வாயாக!

எங்கள் நாயகம், உனது ஹபீப் முஹம்மது முஸ்தபா ரசூல் கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பொருட்டால் !

நீ எங்களுக்கு அருளிய புனிதத் திருமறையான திருக்குர்ஆனின் பொருட்டால் !

நாங்கள் உன்னிடம் மன்றாடி வேண்டிக்கேட்டுக்கொள்கிறோம் யா அல்லாஹ் !

எங்களுடைய துஆக்களை கபூல் செய்து ஏற்றுக் கொள்வாயாக! யா அல்லாஹ்!

**நேர்வழி காட்டும் இறைவா!** நாங்கள், எங்கள் வாழ்நாள் தொடங்கி இதுவரை தொழுத தொழுகைகளிலும், ஓதிய ஓதுதல் களிலும், செய்த திக்ர்களிலும், செய்த நல்ல அமல்களிலும், நோற்ற நோன்புகளிலும் குறையிருப்பின்

மன்னித்து அருள்புரிவாய் யா அல்லாஹ்!

***சாட்சியாளனே!*** ஹஜ்ஜுகளிலும், உம்ராக்களிலும், செய்த தர்ம காரியங்களிலும் ஏதேனும் குற்றம் குறைகளிருந்தால், அவற்றையெல்லாம் உன்னுடைய கிருபையைக் கொண்டு மன்னித்து அனைத்து அமல்களையும் முழுமையாக ஏற்று, அதற்குரிய பலன்களும் பாக்கியமும் எங்களுக்கு முழுமையாக கிடைக்க அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**அளவற்ற அருளாளனே!**

இனிமேல் நாங்கள் செய்கின்ற அனைத்து அமல்களையும் சரிவரச் செய்பவர்களாகவும், குற்றம் குறையின்றி செய்பவர்களாகவும் உனக்கு பொருத்தமான முறையிலே செய்பவர்களாகவும் ஆக்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**நிகரற்ற அன்புடையோனே!**

எங்களுடைய பெற்றோர்கள், அறிந்தும் அறியாமலும் தெரிந்தும், தெரியாமலும், சிறிதும் பெரிதுமாய் செய்த பாவங்களையெல்லாம் மன்னித்து, பாவ மன்னிப்பளித்து

விமோட்சனம் கிடைக்க அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**பேரரசே!** எங்களுடைய பெற்றோர்களின் கப்ரின் வெருட்சியை நீக்கி, அவர்களை நரகத்திலிருந்து பாதுகாத்து சொர்க்கவாதிகளாக ஆக்கி அருள் புரிவதோடு, அவர்களுக்கு ஜன்னத்துல் பிர்தௌஸ் என்ற உயர் சொர்க்கத்தையும் நஸிபாக்கித் தந்து, அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**பரிசுத்தமானவனே!** நாங்களும், எங்களுடைய வாழ்க்கைத் துணை களும், மக்களும், எங்களுடைய உடன் பிறப்புகள், குடும்பத்தினர்கள் அனைவர்களும், உற்றார், உறவினர் கள் மற்றும் உலக முஃமின்கள் முஸ்லிம்கள் அனைவர்களும் தெரிந்தோ– தெரியாமலோ செய்த பாவங்களை எல்லாம் மன்னித்து, பாவ மன்னிப் பளித்து, விமோட்சனம் கிடைக்க அருள் புரிவதோடு நரகத்திலிருந்து பாதுகாத்து சொர்க்கவாதிகளாக ஆக்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**என்றும் உயிருள்ளவனே!** எங்களுக்கு ஏற்பட்டுள்ள உடல் நலக் குறைகளை நீக்கி ஆரோக்கிய வாழ்வை அளித்து அருள்புரிவாயாக! எங்கள் குடும்பத்தில் ஏற்பட்டுள்ள அனைத்து கஷ்டங்களையும், தொல்லை களையும் நீக்கி எங்கள் குடும்பத்தில் செழிப்பை ஏற்படுத்தி கொடுப்பாய் யா அல்லாஹ் !

***சாந்தி அளிப்பவனே!*** எங்களுக்கு கசடு இல்லாத கல்பையும், கஷ்டமில்லாத வாழ்க்கை யையும் நஸிபாக்கித் தந்து, காத்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**அபயமளிப்பவனே!** எங்க ளுடைய கல்புகளில் நீ குடியேறி எங்களுடைய கல்புகளை உன்னு டைய அர்ஷாக ஆக்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**அரவணைத்துக் காப்பவனே!** எங்களுடைய சக்கராத்து காலத் திலே, லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்ற உன்னுடைய திருக் கலிமாவை கல்பாலும் நாவாலும் மெய்யாலும் உச்சரிக்கக் கூடிய பாக்கியம் பெற்றவர்களாக எங்களை ஆக்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**உயிர்ப்பிக்கிறவனே!** நாங்கள் பெருமானார் (ஸல்) அவர்கள் மீது ஓதி வரும் சலவாத்துக்களின் பேருதவியால், எங்களின் ஒவ்வொருவருடைய வியாதிகளை அகற்றும் அரும் மருந்தாக, சஞ்சலங்களை எல்லாம் அகற்றும் சஞ்சீவியாக ஆக்கி அருள்வாய் யா அல்லாஹ் !

**அதிகாரத்தன்மையுள்ளவனே!** ஷைத்தானை எங்களை விட்டும் முழுமையாக தூரமாக்கி, ஷைத் தானிடமிருந்து எங்களை முழுமை யாக பாதுகாத்து, அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**யாவையும் மிகைத்தவனே!**

உனக்குச் செய்ய வேண்டிய கடமைகளை சரிவரச் செய்பவர் களாகவும், உனக்குப் பொறுத்த மான வகையிலே குறித்த நேரத் திலே அதை செய்பவர்களாகவும், எங்களை ஆக்கி அருள் புரிவதோடு, உனக்குப் பிடித்தமான நல்ல அடியார்களாக எங்களையும் தேர்ந் தெடுத்து அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**யாவையும் சிருஷ்டிப்பவனே !**

சக்கராத்து வேதனைகளில் இருந்தும், கப்று வேதனைகளில்

இருந்தும், மஹ்ஷருடைய கேள்வி கணக்கிலிருந்தும், நரக நெருப்பில் இருந்தும், எங்களைப் பாதுகாத்து அருள்வாய் யா அல்லாஹ்!.

**பெருமைக்குரியவனே!** பொறுமையாளனே! ஜன்னத்துல் பிர்தௌஸ் என்ற சொர்க்கத்தில், முதன்மையாக நுழைகின்ற கூட்டத்தாருடன் எங்களையும் சேர்த்து வைத்து, அருள்புரிவாயாக யா அல்லாஹ்!

**யாவையும் உண்டாக்கு கிறவனே!** உனது ஹபீப், எங்கள் நாயகம் முஹம்மது முஸ்தபா ரசூல்

கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அருகாமையில் அவர்களுடைய அருமை சஹாபாக் களுடன், நாங்களும், எங்களுடைய பெற்றோர்களும், வாழ்க்கை துணைகளும், மக்களும், எங்களுடைய உடன் பிறப்புகள், குடும்பத்தினர் அனைவர்களும், மற்றும் உலக முஃமின்கள், முஸ்லிம்கள் அனைவர்களும் அமர்ந்திருக்கக் கூடிய பாக்கியம் பெற்றவர்களாக ஆக்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**மாண்புமிக்கவனே!** நீதி செலுத்துபவனே! எங்கள் நாயகம் முஹம்மது முஸ்தபா ரசூல் கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை எப்பொழுதும் தரிசித்துக் கொண்டு இருக்கக் கூடிய பாக்கியம் பெற்றவர் களாகவும், அவர்கள் மூலம் உன்னை தரிசிக்கக் கூடிய பாக்கியம் பெற்றவர் களாகவும் அதற்கு எங்களை தகுதி உடையவர்களா கவும் ஆக்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**எல்லாவற்றையும்வடிவமைப்பவனே!**

நீ எங்களுக்கு எத்தனையோ நிஃமத்துகளை வாரி வழங்கி இருக்கின்றாய் யா அல்லாஹ்! இதுவரை எங்களுடைய தேவைகள் அனைத்தையும் எவ்வித குறையும் இன்றி பூர்த்தி செய்திருக்கின்றாய் அவைகளுக்கு நன்றி செலுத்து பவர்களாக எங்களை ஆக்கி அருள்புரிவாயாக யா அல்லாஹ்!

**பெருங்கொடையாளனே!**

உன்னுடைய கிருபையைக் கொண்டு எங்களுக்கு உன்னுடைய கஃபத்

துல்லாஹ்வை தரிசிக்கும் பாக்கியத்தையும், ஹஜ்ஜு செய்யும் பாக்கியத்தையும் தந்திருக்கின்றாய் யா அல்லாஹ்! அனைத்துக்கும் நாங்கள் உனக்கு நன்றி செலுத்து கின்றோம் யா அல்லாஹ்! எங்களுடைய நன்றிகளை ஏற்றுக் கொள்வாயாக யா அல்லாஹ்! அல்ஹம்துலில்லாஹ், அஷ்ஷுக்ருலில்லாஹ்!

**வெற்றியளிக்கிறவனே!**

எங்களில் யார் யாரெல்லாம் இதுவரை ஹஜ்ஜுடைய பாக்கியம் கிடைக்காமல் இருக்கின்றார்களோ

அனைவருக்கும், எங்கள் குடும்பத் திலுள்ளோர் அனைவரும், விரைவிலே உன்னால் முழுமையாக ஏற்றுக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜுடைய பாக்கியம் கிடைக்க அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**மிக அறிந்தவனே! ஆதியானவனே!** எங்கள் நாயகம் உனது ஹபீப், முஹம்மது முஸ்தபா ரசூல் கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன்னிடமிருந்து எதையெல்லாம் கேட்டுப் பெற்றார் களோ அனைத்தையும் எங்களுக்கும்

நஸீபாக்கித் தந்து, காத்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**கண்ணியமளிக்கிறவனே! இறுதியானவனே!** எங்கள் நாயகம் உனது ஹபீப், முஹம்மது முஸ்தபா ரசூல் கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன்னிட மிருந்து எவற்றில் எல்லாம் பாது காவல் தேடினார்களோ அவற்றி லிருந்து எங்களையும் பாதுகாத்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**யாவற்றையும் செவியேற் பவனே!** எங்கள் நாயகம் உனது

ஹபீப், முஹம்மது முஸ்தபா ரசூல் கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நேரடியாக வும் ரவ்லா ஷரீபிலும், மென்மேலும் தரிசிக்கக் கூடிய பாக்கியம் பெற்றவர்களாகவும் எங்களை ஆக்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**யாவையும் அடக்கி ஆள் பவனே!** உன்னுடைய நேசத்தைப் பெறு வதற்காக நாங்கள் பின்பற்ற வேண்டியவைகள் ஏதேனும் எங்களுக்குத் தெரியாமல் இருந் தால் உன்னுடைய கிருபையைக்

கொண்டு அவற்றை எங்களுக்கு அறிவித்து தருவாயாக யா அல்லாஹ்!

**தாரளமாகத் தருகிறவனே!** எங்களுடைய சந்ததியர்களுக்கும், வம்சாவழியினருக்கும் உன்னால் முழுமையாகஏற்றுக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜுடைய பாக்கியம் கிடைக்க அருள் புரிவாயாக யா அல்லாஹ்! உன்னை வழிபடும் நல்ல வாலிஹான அமல்கள் செய்து வரும் நல்ல சந்ததிகளை தந்தருள்வாயாக! அவர்களுக்கு ஹுதாயத் என்னும் நேர்மையான வழிகளை காண்பித்து அதன்படி நடக்கச் செய்தருள்வாயாக!

அவர்களது குடும்ப வாழ்வில் ஏற்பட இருக்கும் அனைத்து கஷ்டங்களையும், ஆபத்துகளையும், குடும்பத் தொல்லைகளையும் நீக்கி மன அமைதியைத் தரும் குடும்ப வாழ்க்கையை அமைத்துக் கொடுப்பாயாக. யா அல்லாஹ்!

**உயர்த்துபவனே! உயர்வானவனே!** எங்களுடைய சந்ததியார்களையும் வம்சா வழியினரையும் இந்த உலகம் உள்ளளவும் தழைத்து வாழ அருள்புரிவதோடு, அவர்கள் உனக்குப் பொறுத்தமான நல்ல அடியார்களாகயும் வாழ அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**அனைத்தையும் பார்ப்பவனே!**

யா அல்லாஹ்! எனது வாழ்க்கைத் துணை செய்த பாவங்களையும் நாங்கள் பெற்று வளர்த்த மக்கள் செய்த பாவங்களையும் எங்கள் உடன்பிறந்த சகோதர சகோதரிகள், உற்றார், உறவினர், சுற்றத்தார், முஃமின்கள், முஸ்லிம்கள் அனைவரின் பாவங்களையும் மன்னித்து அருள் புரிவாயாக! யா அல்லாஹ்!

**பாதுகாப்பு அளிப்பவனே!**

எங்களை அநியாயமாக எதிர்ப்பவர் களை வெற்றிக் கொள்ள எங்களுக்கு

நல்லுதவி அளிப்பாயாக! யா அல்லாஹ்!

**மறைவானவற்றையும், பகிரங்கமானவற்றையும் அறிந்தவனே!** யா அல்லாஹ்! எங்களுக்குத் தெரியாமல் மற்றவர்கள் எங்களுக்கு சதி செய்வதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். எங்களுக்கும், எங்களுடைய வாழ்க்கை துணைகளுக்கும், மக்கள்மார்கள், எங்களுடைய உடன் பிறப்புகள், குடும்பத்தினர்கள், உற்றார், உறவினர்கள் மற்றும் உலக

முஃமின்கள், முஸ்லிம்கள் அனைவர் களுக்கும் நீ பொருந்திக் கொள்ளக் கூடிய நீடித்த ஆயுளையும் நல்ல உடல் ஆரோக்கியத்தையும் தந்து, செய்வினை வஞ்சனை, நோய், பேய், ஷைத்தான் கோளாறுகள், அனைத்தி லிருந்தும் பாதுகாத்து அருள்வாய் யா அல்லாஹ்! நீ பொருந்திக் கொள்ளக் கூடிய ஹலாலான இரண பரகத்தையும், செல்வத்தையும், ரிஸ்க்கையும், ஈந்துவக்கும் இனிய தன்மை களையும், அபரிமிதமாக விஸ்தீரண மாக்கித் தந்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**தீர்ப்பளிப்பவனே! நித்திய ஜீவனே!** எங்களுடைய வாழ்நாள் முழுமைக்கும் உன்னுடைய திக்ரிலும், நீ எங்களுக்கு வாரி வழங்கி யிருக்கிற நிஃமித்துகளுக்கும் ஷுக்ரு செய்வதிலேயே கழிந்திட அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**எங்கும் பிரசன்னமாயிருக்கும் சாட்சியாளனே!** நாங்கள் தனித்தோ, கூட்டாகவோ, வாலிபத்திலோ, வயோகத் திலோ, தெரிந்தோ, தெரியாமலோ, விரும்பியோ, பலவந்தப்படுத்தப் பட்டோ, வேண்டுமென்றோ தற்செய லாகவோ, ரகசியமாகவோ பகிரங்க

மாகவோ, பகலிலோ இரவிலோ நாங்கள் செய்துள்ள எங்களின் அனைத்துப் பாவங்களையும் உனது விசாலமான கிருபையின் பொருட்டால் மன்னித்தருள்வாயாக! இனி கடன்கள் இல்லாத வாழ்க்கையை எங்களுக்கு அமைத்துக் கொடுப்பாயாக! வட்டியின் பக்கம் நெருங்காத வாழ்வை எங்களுக்கு ஏற்படுத்தித் தருவாய்! யா அல்லாஹ்!

**நீதியாளனே!** எங்களுடைய வாழ்நாள் முழுமைக்கும் உன்னுடைய பாதுகாப்பை எங்களுக்கு வாரி வழங்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**பாசமுள்ளவனே!** எங்களுக்கு நீ பொருந்திக் கொள்ளக்கூடிய ஹலாலான இரண பரக்கத்தையும் செல்வத்தையும், ரிஸ்க்கையும், விஸ்தீரணமாக்கித் தந்து சொந்தத்தில் தொழில் துறைகள் வைத்திருப்பவர்களுக்கு தொழில் துறைகளில் விஸ்தீர ணத்தையும், செல்வச் செழிப்பையும், பரக்கத்தை யும் தந்து தொழில் துறைகள் பல்கிப்பெருகிட அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**உயர்த்துகிறவனே! ஒன்று சேர்க்கிறவனே!** நாங்கள் முன்னேற்றமடைய உதவும் தொழில்களில்

எங்களை ஈடுபடச் செய்து, நாங்கள் செய்யும் வியாபாரம், தொழில்களில் பரக்கத்தை ஏற்படுத்திக் கொடுப் பாயாக! நீ ஆகுமாக்கியதை கொண்டு எங்கள் மனதை போதுமானதாக்கி வைப்பாயாக! நீ விலக்கியதை விட்டு எங்களை தூர விலக்கி இருக்கச் செய்வாயாக! உனக்கு மாறு செய்வதை விட்டும் எங்களை நீங்கி இருக்க செய்வாயாக! உன்னிடம் உதவி பெற்றுக் கொள்பவர்களாக எங்களை ஆக்கி வைப்பாய் யாஅல்லாஹ் !

**அந்தரங்கம் அறிபவனே!**

மனிதர்களில் கொடியவர்களாலும், பொறாமைகாரர்களாலும் தீயசக்தி

களினாலும், பில்லி வஞ்சனை, சூது, வாது, செய்வினை செய்வோர் களாலும் நப்சினுடைய சதிகளினாலும் எதிர்பாராத விளைவுகளாலும் கண்ணேறுகளினாலும் ஏற்படும் தீங்குகளை விட்டும் காத்து அருள்வாய் யா அல்லாஹ்! இயற்கை யின் சீற்றங்களாலும் மற்றும் நீர், நெருப்பு, காற்று, வாகன போக்கு வரத்து இவைகளாலும் எவ்வித தீங்குகளும், துயரங்களும், கஷ்டங் களும், விபத்துகளும் ஏற்படாமல் எங்களை பாதுகாத்து அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**சாந்தமுள்ளவனே!** எங்களுடைய மக்கள்மார்கள் அனைவர்களுக்கும் நீ பொருந்திக் கொள்ளக்கூடிய நீடித்த ஆயுளையும், நல்ல உடல் ஆரோக்கியத்தையும் தந்து அவர்கள் நன்கு படித்து நல்ல அறிவுள்ள பிள்ளைகளாகவும், எல்லா செல்வங் களையும் சிறப்புகளையும் பெற்று நன்கு ஓதி நல்ல இல்முள்ள உனக்கு பிடித்தமுள்ள பிள்ளைகளாக உன்னுடைய பாதுகாவலில் வாழ, அருள்புரிவாயாக யா அல்லாஹ்! இவ்வுலக வாழ்வில் எங்களை சீர்படுத்தி அமைதி பெறவும், எங்களது

மானத்தை பாதுகாத்து ஒழுங்கு முறையில் எங்களை வாழச் செய்யவும், எங்களுடன் ஜோடி சேர்த்து வாழச் செய்துள்ள எங்கள் மனைவியரை! கணவரை எங்களுடன் ஒருமித்தக் கருத்து உடையவராகவும் ஒழுக்கத்தில் சிறந்தவராகவும் நன் நடத்தையும் நற்குணமிக்கவராகவும் ஒருவருக்கொருவர் கண்ணியமளித்து நல்லிணக்கத்துடன் நடப்பவராகவும், கவலைகளைத் தீர்த்து வைக்கும் நல்ல மனைவியராகவும்! கணவராகவும் எங்களுக்கு ஆக்கி வைப்பாயாக! யா அல்லாஹ்!

**சாந்திமயமானவனே!** இப்லீஸின் தீங்குகளை விட்டும் எங்களை பாதுகாத்து எங்களுக்கு ஏற்படும் வறுமை, பசி, பட்டினி, பஞ்சம் ஆகியவற்றிலிருந்து எங்களை பாதுகாத்துக் கொள்வாயாக! எங்களுக்கு ஏற்பட இருக்கும் பேராபத்துக்களை விட்டும் எங்களை பாதுகாத்துக் கொள்வாயாக! உனது எண்ணிலடங்கா ஏராளமான படைப்புகளில் மிருகங்கள், கொடிய விஷ ஜந்துக்கள், நுண்ணிய கிருமிகள் ஆகியவற்றால் ஏற்பட இருக்கும் பாதிப்புகளிலிருந்தும் எங்களை பாதுகாத்துக் கொள்வாயாக! யா அல்லாஹ்!

**ஞானம் நிறைந்தவனே!** எங்கள் குடும்பத்தில் ஒரு பிள்ளையை ஆலிமாக ஆக்குவாயாக யா அல்லாஹ்!

**முறையீட்டை ஏற்பவனே!** எந்த சூழ்நிலையிலும் எங்களுடைய பிள்ளைகள் அல்லாஹ் உன்னுடைய கோபத்தையோ, எங்களுடைய கோபத்தையோ பெற்றுவிடாமல் அவர்களைப் பாதுகாத்து அருள் புரிவதோடு, நாங்களும் உன்னுடைய கோபத்தையோ, எங்களுடைய தாய், தந்தையர் கோபத்தையோ பெற்று விடாமல் எங்களைப் பாதுகாத்து

அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**பாதுகாப்பவனே!** எங்களுடைய குடும்பங்களி லுள்ள அனைவர்கள் மத்தியிலும், பெற்றோர்கள் பிள்ளைகள் மத்தி யிலும் சகோதர சகோதரிகள் மத்தியிலும் உலக முஃமின்கள், முஸ்லிம்கள் அனை வர்கள் மத்தியிலும், எங்களுடைய குடும்பங் களிலுள்ள தம்பதியர்கள் அனைவர்கள் மத்தியிலும் ஒற்றுமை யைத் தந்து அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**பொறுப்பேற்பவனே!**

எங்களுடைய குடும்பங்களில் உள்ள தம்பதியர்கள் அனைவர் களுக்கும், ஒரு கணவன் ஒரு மனைவியாய் எல்லாச் செல்வங் களையும் சிறப்பு களையும் பெற்று, உனக்குப் பொருத் தமான தம்பதிகளாக இல்லறத்தி லே நல்லறம் பேணி வாழ, அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

நாங்கள் மரித்து மறைந்தாலும் எங்களுக்காகத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் நன்மை நிறைந்த நற்காரியங்கள் அதிகமதிகமாகச் செய்துள்ளவர்களாக எங்களை ஆக்கி

வைப்பாயாக! கப்ருடைய அதாப் வேதனையை விட்டு எங்களைப் பாதுகாத்துக் கொள்வாயாக! நபிமார்கள், சித்தீக்கீன்கள், ஹுஹதாக்கள் சாலிஹீன்கள், நல்ல அமல்கள் புரிந்துள்ள நல்லடியார்கள் ஆகியவர் களின் கூட்டத்தில் எங்களையும் சேர்த்து வைப்பாயாக!

**கம்பீரமும், கருணையும் உடையவனே!** எங்களுக்கு நீ பொருந்திக் கொள்ளக் கூடிய நிம்மதியான, சுபீட்ஷமான வாழ்க்கையையும் கண்ணியமான வாழ்க்கையையும், மரியாதைக்குரிய

வாழ்க்கையையும், சீரான வாழ்க்கை யையும், சிறப்பான வாழ்க்கை யையும், சலாமத்தான வாழ்க்கை யையும், நஸீபாக்கித் தந்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**சீமானே!** நாங்கள் வசிக்கின்ற இல்லங்களிலும், புசிக்கின்ற உணவிலும், உடுத்துகின்ற உடை யிலும்எங்களுக்கு பரக்கத்தைத் தந்து காத்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**நன்றி பாராட்டுகிறவனே!** எங்கள் இல்லங்களும், உள்ளங் களும் சிறக்க அருள் புரிவாயாக

யா அல்லாஹ்!நாங்கள் செய்து வரும் அமல் களின் கூலியில் எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் பகிர்ந்து கொடுத்து உதவி செய்வாயாக. அவர்களுக்காக பாவ மன்னிப்பு கேட்டு பெறுபவர் களாக எங்களை ஆக்கி வைப்பாயாக, எங்களது பிரார்த்தனை களை ஏற்று எங்கள் பெற்றோர் செய்த அனைத்து பாவங்களையும் உன் கருணையால் மன்னித்து அருள் வாயாக! யா அல்லாஹ்!

***சீமானாக்கி வைப்பவனே!*** நாங்களும் எங்களைச் சேர்ந்த வர்களும் பிறந்த ஊரிலும், பிறந்த

நாட்டிலும், வசிக்கின்ற ஊரிலும் வசிக்கின்ற நாட்டிலும், சுபீட்ஷத்தையும், நிம்மதியையும், அமைதியையும், கண்ணியத்தையும் தந்து அருள் புரிவதோடு, காபிர்களாலும்,கொடியவர் களாலும் மற்றும் எதிர் பாராத விளைவுகளாலும், எவ்விதத் தீங்கு களும் துயரங்களும் கஷ்டங்களும் ஏற்படாமல் எங்களைப் பாதுகாத்து அருள்புரிவாயாக யா அல்லாஹ்!

**மகத்தான அர்ஷின் ரப்பே!** - யா அல்லாஹ்! எங்களுக்கும், எங்கள் சந்ததியினருக்கும் உனது புனித

திருமறை வசனங்களை தினமும் ஓதுவதற்கு நல்லுதவி செய்வாயாக! எங்களையும், எங்கள் சந்ததி அனைவரையும் எங்கள் நாயகம் (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்து சொல்பவர்களாக ஆக்கி வைப்பாயாக யா அல்லாஹ்!

**என்றும் நிலைத்திருப்பவனே!**

பிற மதத்தோர்களுடன் வாழும் நாங்கள் அனைவரோடும் அன்போடும் பண்போடும் பாசமோடும்– ஒற்றுமையாக வாழ அருள்புரிவயாக யா அல்லாஹ் !

**நினைத்ததை பெறுபவனே!** இதுவரை எங்களுடைய தேவைகள் அனைத்தையும் எவ்விதக் குறையு மின்றி பூர்த்தி செய்து வைத்தது போல், இனிமேல் ஏற்படுகின்ற தேவைகளையும் எவ்வித குறையும் இல்லாமல் பூர்த்தி செய்து வைப்பாயாக யா அல்லாஹ்!

**இல்லாமையிலிருந்து உண்டாக்குபவனே!** எங்களுடைய தேவைகள் எதற்காகவும், மற்ற மானிடர்களிடத்திலோ, அல்லது உனது வேறு எந்த படைப் பினங்களிடத்திலோ,

போய் நாங்கள் கையேந்தி நின்று விடாமல் எங்களைப் பாதுகாத்து அருள்புரிவாய்! யா அல்லாஹ்!

**ஆற்றல் உள்ளவனே!**

எங்களுடைய குடும்பங்களில் யார் யாரெல்லாம் நோய் நொடிகளோடு கஷ்டப்படுகின்றார்களோ, அனைவர் களுடைய நோய் நொடிகளை நீக்கி அனைவர் களுக்கும் நல்ல சுகத்தை தந்து அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**எந்தத் தேவையுமற்றவனே!**

எங்களுடைய குடும்பங்களில்

யார்யாரெல்லாம் எந்தெந்த தேவை களோடு இருக்கின்றார்களோ, அந்தந்தத் தேவைகளையெல்லாம் எவ்விதக் குறையுமில்லாமல் பூர்த்தி செய்து வைப்பாயாக யா அல்லாஹ்!

***மறுமை நாளின் அதிபதியே!*** எங்களுடைய குடும்பங்களில் இருக்கின்ற திருமணமாகாத ஆண், பெண் மணமக்கள் அனைவர் களுக்கும் விரைவிலே திருமணம் நடைபெற அருள் புரியவாயாக யா அல்லாஹ் !

***உயர்வானவனே!*** எங்கள்

அனைவரையும் கடன் தொல்லையில் இருந்து பாதுகாத்து அருள் புரிவதோடு, எந்த சூழ்நிலையிலும் நாங்கள் கடன்காரர்களாக மரணித்து விடாமல் எங்களைப் பாதுகாத்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**மாபெரும் சக்தியுள்ளவனே!** எங்கள் குடும்பத்தில் ஏற்பட்டுள்ள கடன் தொல்லைகள், பேராபத்தால் ஏற்பட்டுள்ள சிரமங்கள், எதிரிகளால் ஏற்பட்டுள்ள கொடுமைகள், துன்பங் கள், துயரங்கள் அனைத்தையும் எங்களை விட்டும் நீக்கியருள்வாயாக! யா அல்லாஹ் !

**இரக்க சிந்தையுள்ளவனே!**

எங்களில் யார்யாரெல்லாம் பிள்ளைச் செல்வங்கள் இல்லாமல் இருக்கின்றார்களோ, அனைவர்களுக்கும், எங்களில் யார்யாரெல்லாம் பிள்ளைச் செல்வங்களுக்காக துஆச்செய்யும்படிச் சொன்னார்களோ அவர்களுக்கும் சீதேவித்தனமான பிள்ளைச் செல்வங்களை தந்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**புதுமையாக படைப்பவனே!**

எங்களில் யார் யாரெல்லாம் சொந்த இல்லங்கள் இல்லாமல் இருக்கின்

றார்களோ, அனைவர் களுக்கும் சொந்த இல்லங்களைத் தந்து அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**ஒளியானவனே!** எங்களுடைய ஊர்களில் பள்ளிவாசல்கள், மத்ர ஸாக்கள் மற்றும் பொது ஸ்தாபனங் கள் மூலம் நடைபெறும் கட்டிட வேலைகள், விரைவில் பூர்த்தி அடையவும், அந்த வேலைகளுக்கு பொருளுதவிகள் செய்யும் நல்லடி யார்களையும் அவர்கள் குடும்பத் தார்களையும் அவர்களோடு உறு துணையாக இருப்பவர்களையும்,

உன் நல்லடி யார்கள் கூட்டத்தோடு சேர்த்து வைப்பாயாக யாஅல்லாஹ்!

***மிகப்பெரியவனே!*** யார் யாரெல்லாம், எங்களிடம் எந்தெந்த நன்மையான தேவைகளுக்கு துஆச் செய்யும்படிச் சொன்னார் களோ அவர்களுக்கு அந்த தேவை களை எல்லாம் பூர்த்தி செய்து வைப்பாயாக யா அல்லாஹ்!

**கணக்கு கேட்பவனே!** எந்த சூழ்நிலையிலும், குஃபரில் கொண்டு விட்டு விடும் வறுமை யோ, மற்றவைகளோ, எங்களை வந்து

அண்டிவிடாமல் பாதுகாத்து அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**மரணிக்கச் செய்கிறவனே!**

எங்களிடத்திலே கப்ரில் கேட்கப்படும் முன்கர் – நக்கீர் வானவர்களின் கேள்விகளுக்கு திக்கித் திணறாமல் பதில் தரும் ஆற்றலை எங்களுக்கு கொடுத்தருள்வாயாக! சிராத்துல் முஸ்தகீம் என்னும் கூர்மையான மெல்லிய பாலத்தைக் கடக்கும் போது மின்னல் தோன்றி மறையும் வேகத்தில் கடந்திடும் ஆற்றலை எங்களுக்கு கொடுத்தருள்வாயாக! எங்கள் சந்ததிகளை எங்களுக்காக பாவ மன்னிப்பு கேட்டுப் பெறும் சந்ததி

ஆக்கித் தந்தருள்வாயாக! யா அல்லாஹ் !

**உறுதி வாய்ந்தவனே!** எந்தச் சூழ்நிலையிலும், நாங்கள் பொய் பேசாமலும், புறம் பேசாமலும், கோள் சொல்லாமலும், மற்றவர்கள் மீது பொறாமை கொள்ளாமலும், மற்றவர்கள் கோபாதாபத்திற்கு ஆட்பட்டுவிடாமலும் எங்களைப் பாதுகாத்து அருள்புரிவாயாக யா அல்லாஹ் !

**விசாலமானவனே!** நாங்கள் உனக்குப் பிடித்தமான நல்லடியார் களாகவும், நல்லவர்களாகவும், உண்மையாளர்களாகவும், நேர்மை

யாளர்களாகவும், ஏழைகளுக்கு உதவக் கூடியவர்களாகவும், எத்தீம்களுக்கு ஆதரவு கொடுக்கக் கூடியவர்களாகவும் வாழ அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**உள்ளன்பு மிக்கவனே!** நாங்கள் கேட்டவற்றிலும், கேட்காதவற்றிலும் எங்களுக்கு ஏற்பட இருக்கின்ற தீங்குகள், துயரங்கள், கஷ்டங்கள், சிரமங்கள் அனைத்திலிருந்தும் பாதுகாத்து, அதனின்றும் எங்களைக் காப்பாற்றி, எங்களுடைய இம்மை வாழ்க்கை யையும், மறுமை வாழ்க்கையையும், ரஹ்மத் தானதாகவும், பரக்கத்தான தாகவும், சலாமத்தானதாகவும் அமைய

அருள்புரிவாயாக யா அல்லாஹ்!

**மரித்தவர்களை எழுப்புபவனே!** நாங்கள் 'அறிந்தும் அறியாமலும் தெரிந்தும், தெரியாமலும், சிறிதும் பெரிதுமாய் செய்த பாவங்களை யெல்லாம் மன்னித்து, பாவ மன்னிப்பளித்து விமோட்ஷணம் கிடைக்க அருள் புரிவதோடு நரகத்திலிருந்து பாதுகாத்து சொர்க்கவாதிகளா கவும் ஆக்கி அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**நன்றி பாராட்டுபவனே!** உனது அருட்கொடைக்கு நாங்கள் நன்றி செய்யவும் நீ எதனை பொருந்து வாயோ அத்தகைய நற்செயல்கள்

செய்யவும், எங்களுக்கு உதவி செய்வாயாக! எங்கள் அனைவரிலும் ஒற்றுமை எனும் இறைவேதக் கயிற்றை ஒருங்கிணைந்து பற்றி பிடிக்கும் ஒற்றுமையை எங்களிடம் ஏற்படுத்திக் கொடுப்பாயாக! யா அல்லாஹ்!

**அதிகம் மன்னிப்பவனே!** யா அல்லாஹ் பாவங்களை மன்னிப்பதாக நீ கூறியவாக்குப்படி எங்களில் மரித்தோர், இருப்போர், இனிப் பிறப்போர் அனைவர்களது அனைத்து பாவங் களையும் உன் கிருபையால் மன்னித் தருள்வாயாக! யா அல்லாஹ்! எங்களுடைய பாவத்தை மன்னிக்காமல்

விட்டு விடாதே! எங்களுடைய எந்தக் கவலையையும் நீக்காமல் விட்டுவிடாதே! உன்னிடம் துவா ஒப்புக் கொள்ளப் படும் நன்னேரத்தில் எங்கள் துஆவை கேட்டு பெறும் பாக்கியத்தை எங்களுக்கு தந்தருள்வாயாக! யா அல்லாஹ்!

**அரசாட்சிக்குரியவனே!** எங்கள் நாயகம், உனது ஹபீப் முஹம்மது முஸ்தபா ரசூல் கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும், அன்னவர்களின் வழி வந்தோர், தோழர்கள், உம்மத் தவர்களில் நல்லடியார்கள் மீதும் அவர்களின் பொருட்டால் எங்கள் மீதும், ஆசியும், சாந்தியும் சலாமும்,

பரக்கத்துமாக அருள் புரிவாயாக யா அல்லாஹ் !

**உரிமையாளனே!** அனைத்து புகழும், புகழ்ச்சியும், அனைத்து உலகையும், எங்களை யும் படைத்து பரிபாலித்து எங்கள் தேவைகள் அனைத்தையும் பூர்த்தி செய்து வைத்து இலாஹ் வாக இருக்கின்ற அல்லாஹ் உனக்கே உரித்தாகும் யா அல்லாஹ் !

**எங்கள் இறைவா !** மாட்சிமை மிக்க உனது இல்லத்தை தரிசிக்க வும் – உனது தூதரும் நேசருமான முஹம்மத் (ஸல்) அவர்களின் அழகிய சுன்னத்தை பின்பற்றவும் –

மாண்புமிக்க தூய செயல்களை நிறைவேற்றவும் வந்துள்ளோம். உன்னையே நம்பியுள்ளோம். உனது கருணையையே நாடுகிறோம் யா அல்லாஹ்!

**நேர்வழி காட்டுகிற இறைவா!**

எங்கள் நிலைமையை நீ காண்கிறாய், எங்கள் வேண்டு தலை நீ கேட்கிறாய், எங்களின் உள் மனதையும் – புற உள்ளத்தை யும் அறிந்திருக்கிறாய், எங்கள் செயல்கள் எதுவுமே உனக்கு மறைவானதல்ல! உன் கருணையை வேண்டி, உன் மன்னிப்புக்காக தாழ்மையுடன் வேண்டி நிற்கின் றோம் இறைவா – எங்களை மன்னித்து

அருள்புரிவாய் – யா அல்லாஹ்,

**பயனளிப்பவனே!** மன்னிப்பு என்ற குளுமையையும், பொறுத்தல் எனும் இன்சுவையையும் நாங்கள் சுவைக்கும்படிச் செய்வாய் யா அல்லாஹ்!

**என்றும் நிலைத்திருக்கும் இரட்சகனே!** நாங்கள் உன்னிடம் வந்து உனது பேரின்ப அருளை அடைய நாடி சிறப்புமிக்க இப் புனித இடத்தில் உன் முன்னால் நிற்கின்றோம்! உனது சுவர்க்கப் பேற்றை எங்களுக்கு அருள் வாயாக! ஒப்பற்ற மன்னிப்பையும் இன்பங்களையும் பொழிவாயாக!

**யா வாஹிதே - இரஹ்மானே!**

எங்களது இதயத்தை ஒளி உடையதாகவும், எங்களது அடக்க ஸ்தலத்தை அமைதியானதாகவும் ஆக்கி, தவறுகளிலிருந்து எங்களைக் காப்பாற்றி – எங்களுள் புனிதத் தன்மைகள் குடியேறச் செய்வாயாக!

**தவ்பாவை அங்கீகரிப்பவனே!**

உனது நல்லருளை நாடியே பாவமன்னிப்பு தேடியவனாக கடமையான ஹஜ்ஜையும் உம்ராவையும் மற்றுமுள்ள ஏனைய வணக்க வழிபாடுகளையும் நிறைவேற்ற வந்துள்ளோம் இறைவா ! எங்களது குற்றங்களை உணர்ந்தவர்களாக,

எங்களது ஊரை விட்டு, உறவை விட்டு இங்கு வந்துள்ளோம் – உன்னிடமே கெஞ்சிக் கெஞ்சி மன்றாடுகின்றோம். எங்கள்து குற்றங்களை – பாவங்களை மன்னித்து அருள் புரிவாயாக யா அல்லாஹ்!

**சங்கைக்குரியவனே!** புனித இஸ்லாத்தை எங்களுக்கு அருளி நேர்வழி காட்டினாய்! எங்கள் உயிர் கைப்பற்றப்படும் வரை – எங்களிட மிருந்து இஸ்லாம் எனும் தீப ஒளியை பறித்து விடாமல் அதிலேயே நாங்கள் நிலைத்து நிற்க உண்மையான நம்பிக்கையை

எங்களிடத்தில் உவக்கும்படி செய்வாய் யா அல்லாஹ்!

**எங்களை கண்காணிக்கிறவனே!** இந்த புனித ஸ்தலத்திலிருந்து எந்த பாவத்தையும் மன்னிக்காம லும், எந்த கஷ்டங்களை அகற்றாமலும் எங்களை விட்டு விடாதே! எந்தவொரு கடனையும் – கோளாறுகளையும் – துன்பங் களையும் – வறுமைகளையும் – போக்காமல் எங்களை விட்டு விடாதே இறைவா!

**மெய்ப்பொருள் ஆனவனே!** எங்கள் இதயத்தோடு இரண்டறக் கலந்து விட்ட புனிதமான உண்மை,

நம்பிக்கையையும் – ஈமானையும் – மிகச்சிறந்த மெய்யுறுதியையும் – எகீனையும் எங்களுக்கு அருள உன்னிடமே வேண்டுகிறோம் யா அல்லாஹ்!

**ஆற்றல் பெறச் செய்பவனே!** மன்னிக்கும் தயாளனே! வாழ்வில் எங்களுக்கு எது உவந்த தோ, அதற்காகவே எங்களை வாழவைப் பாயாக! மரணத்தில் எது நன்மை பயக்குமோ, அதற்காகவே எங்களை மரணிக்க செய்வாயாக!

**எங்களை படைத்து காப்பவனே!** எங்களுக்கு ஏற்படும் அனைத்து குறைகளையும், நஷ்டங்களையும்,

தடைகளையும், நோய்களையும் விட்டு எங்களை காப்பாற்று வாயாக! எங்களுக்கு நன்மை பயக்கும் வெற்றிகளை தந்து அருள்வாயாக! யா அல்லாஹ்!

**ஈருலக நாயனே!** இம்மையின் கவலைகளை விட்டும், தற்காக வே எங்களது கவனம் முழுவதும் செலவிடுவதை விட்டும் எங்களை விலக்கி (பிறர்) தயவை நாடாது எங்களை காத்தருள்வாயாக! யா அல்லாஹ்!

**மகத்துவமிக்கவனே!** உன் சோதனைகளிடையே பொறுமை காட்டவும், நீ அருளிய செல்வங்

களுக்காக நன்றி செலுத்தவும், எங்களுக்கு போதிய ஆற்றலை தந்தருள்வாயாக! உன் தரிசன பாக்கியம் கிடைக்கவிருக்கும் தினத்தன்று அதைக் காணும் ஆற்றலை எங்களுக்கு அருள்வாய் யா அல்லாஹ்!

**மேன்மைக்குரியவனே!** இந்த புனிதப் பயணத்தில் எங்களை வெற்றியாளர்களாகவும், கருணைக்கு உரியவர்களாகவும், மகிழ்ச்சி மிக்கவர்களாகவும், உனது நன் மதிப்பைப் பெற்றவர்களாகவும், மன்னிக்கப்பட்டவர்களாகவும்,

குற்றங்குறைகளை விலக்கிய மாசற்றவர்களாகவும், ஹலாலான செல்வங்களுக்கு உரிமை உடையவர் களாகவும் ஆக்கி எங்கள் செயல்கள் அனைத்திலும் அருளைப் பொழிந்து, எங்கள் செல்வங்கள், எங்கள் மக்கள், எங்களது குடும்பத்தார்கள் எங்கள் ஊர் மக்கள் ஆகிய அனைவோர் மீதும் உன் நல்லருளைப் பொழிவாய் யா அல்லாஹ்!

**அருள் மழையை பொழிபவனே!** நாங்கள் வசிக்கின்ற வீட்டிலும் –

ஊரிலும் நாட்டிலும் உன் மகத்தான கருணையையும் நல் அருளையும் நல் உதவியையும்—ஞான ஒளியை யும் – மகத்தான வெற்றிகளையும் தருவாய் யா அல்லாஹ்!

**புகழுக்குரியவனே!** எங்களுக்கும், எங்கள் மூதாதையர் எங்கள் சந்ததியினர், சகோதர – சகோதரி கள் குடும்பத்தினர்க்கும் மற்றும் இங்கு கூடியுள்ள அனைவர்களுக் கும், இன்னும் இங்கு வர இயலாமல் பின் தங்கி விட்டவர்களுக்கும், சகல முஸ்லிம் களுக்கும் உன் கருணை எனும் மன்னிப்பை தந்தருள்வாயாக!

***எங்களின் ஏகனே!*** ஹஜ்ஜாஜி களாகிய எங்களுக்காக இந்நூலை அச்சிட்டு உதவிய அடியார் களுக்கும் அவர் தம் பெற்றோர் – மனைவி, மக்கள் அவரைச் சார்ந்தோர் ஆகிய அனைவர்களுக் கும் உனது பூரண அருளையும், அன்பையும், ரஹ்மத்தையும், நிஃமத்தையும், ஃபிர்தௌஸ் எனும் சுவர்க்கத்தையும் அளித்தருள்வாய் யா அல்லாஹ்!

அல்லாஹ்வின் நல்லாசியும், ஈடேற்றமும் (ஸலவாத்தும்ஸலாமும்) முஹம்மத் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள்

மீதும், அவர் தம் சந்ததியினர், தோழர்கள் மீதும் உண்டாவதாக!

**தூரமில்லாது சமீபித்து இருப்பவனே!** யா அல்லாஹ்! எங்களுடைய பிரார்த்தனையை ஏற்றுக் கொள்வாயாக! எங்கள் துஆக்களை நல்லடியார்களுடைய துஆக்களுடன் இணைத்து அருள் செய்வாயாக! எங்களுக்கு துஆவின் வாசலை என்றென்றும் திறந்து வைத்து நாங்கள் கேட்கும் ஹலாலான துஆக்கள் அனைத்தையும் நிறை வேற்றி அருள்புரிவாயாக யா அல்லாஹ்!

**கவலையை போக்குபவனே! துக்கத்தை நீக்கி வைப்பவனே !**

யா அல்லாஹ்! நபிமார்களின் முறையீட்டையும், துஆக்களையும், தஸ்பீஹ்களையும் ஏற்று அவர்களுக்கு ஏற்பட்ட சோதனை களையும், கஷ்டங்களையும், பிணிகளையும் நிவர்த்தி செய்து உதவிய உன்னிடம் நாங்கள் கையேந்திக் கேட்கின்றோம், யா அல்லாஹ்! எங்கள் பிரார்த்தனைகளை ஏற்று எங்களுக்கு ஏற்படும் சோதனை களையும் கஷ்டங்களையும் நிவர்த்தி செய்வாயாக!

**அருட்பாக்கியங்களை அளிப்பவனே!** யா அல்லாஹ்! நரக

நெருப்பிலிருந்து எங்களை பாதுகாத் தருள்வாயாக!; கிருபை யாளர்களுக் கெல்லாம் மகா கிருபையாளனே! உன் சிருஷ்டி களில் சிரேஷ்டரான முஹம்மது நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும் அவர்கள் கிளையார்கள், தோழர் கள் அனைவர் மீதும் ஸலவாத் எனும் அருள்மழையையும் ஸலாம் என்னும் சாந்தியையும் எல்லையின்றி நிரந் தரமாக வருஷித்து அருள்வாயாக! இன்னும் எங்கள் மீதும், எங்கள் பெற்றோர் மீதும், அல்லாஹ்வுடைய எல்லா நல்லடி யார்கள் மீதும் உனது மேலான அருட்கொடைகளை சதா

காலமும் பொழிந்து அருள் புரியாவாக யா அல்லாஹ்!

யா அல்லாஹ்! எங்கள் அனைவரின் ஹஜ்ஜையும் மற்ற அமல்களையும் ஏற்று ஈருலக வெற்றியை நல்கு வாயாக!

**அரசர்களுக்கெல்லாம் அரசனே!**

இறை அருள் பெறும் முதல் ஆலயமான திரு கஃபத்துல்லாவை பார்த்து மகிழும் பாக்கியத்தை எங்களுக்கு தந்த நீ, எங்கள் சந்ததி களுக்கும் ஏற்படுத்தி கொடுப்பாயாக! நபி (ஸல்) அவர்களுடன் நெருங்கிய நேசத்தைப் பெற்று அவர்களோடு நிரந்தரமாக சுவர்க்கத்தில் தங்கி

இருக்கும் நற்பாக்கியத்தை எங்களுக்கு தந்தருள்வாயாக! யா அல்லாஹ்!

**கம்பீரமும் கண்ணியமும் உடையவனே!** யா அல்லாஹ்! இறுதிக் கடமையான புனித ஹஜ்ஜை நிறைவேற்றி மகாமே இப்ராஹீம் இடத்தில் தொழுது வரும் பாக்கியத் தையும் தந்து நபி (ஸல்) அவர்களால் கட்டப்பட்ட மஸ்ஜிதே நபவியில் தொழுது, ரவ்லா ஷரீபில் அவர்களை தரிசனம் செய்து சலாம் சொல்லும் பாக்கியத்தையும் தந்துள்ளாய் அதற்காக நன்றி செலுத்துகிறோம். யா அல்லாஹ்!

யா அல்லாஹ்! எங்கள் அனைவரின் பாவங்களை மன்னித்து அன்று பிறந்த

பாலகனைப்போல பாவ அழுக்கிலிருந்து தூய்மைப்படுத்தி தாயகம் திரும்ப அருள் புரிவாயாக! எங்களின் பிரயாணங்களை எளிதாக்கி மீண்டும் – மீண்டும் உன் இல்லத்தை தரிசிக்க பேரருள் புரிவாயாக. ஆமீன்.

ரப்பனா ழலம்னா அன் (f) புஸனா வ இன்லம் தஃபிர்லனா வ தர்ஹம்னா ல னக்கூனன்ன மினல் காஸிரீன்

ரப்பனா ஆத்தினா (f) பித்துன்யா ஹஸனத்தன் வபி (f)ல் ஆகிரத்தி ஹஸனத்தன் வகினா அதா பன்னார்.

ஸல்லல்லாஹு அலா கைரி

கல்கிஹி செய்யிதினா, வநபிய் யினா, வ மௌலானா முஹம்மதின் வ அலா ஆலிஹி செய்யதினா முஹம்மதின் வ பாரிக் வசல்லிம் அலைஹி,

சுப்ஹான ரப்பிக்க ரப்பில் இஸ்ஸத்தி அம்மா யஸிபூ (f) ன் வஸலாமுன் அலல் முர்ஸலீன வல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

ஆமீன்! ஆமீன்! யாரப்பில் ஆலமீன்!

ஸல்லல்லாஹு அலா முஹம்ம தின் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம், ஸல்லல்லாஹு அலா முஹம்மதின் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம், ஸல்லல் லாஹு அலா முஹம்மதின் யா ரப்பி ஸல்லி அலைஹி வ ஸல்லிம்.

உங்களுடைய துஆவில் எங்களையும் நினைவு கூறும்படி வேண்டுகிறோம்.

**வடக்கு ஆத்தூர்**
**ஹாஜியானி செய்யது பாத்திமா**
**ஹாஜி S.H. முஹம்மது இக்பால்**
**ஹாஜியானி வஜிஹா இக்பால்**

## மக்கா முகர்ரமில் உள்ள முக்கிய இடங்கள்

1. ஜபலெ அபூகுபைஸ் 2. பெருமானார்(ஸல்) அவர்கள் பிறந்த இடம், 3. ஹிரா குகை 4. ஹஜ்ரத் கதிஜதுல் குப்ரா (ரலி) அவர்கள் வீடு, 5. ஹஜ்ரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் வீடு, 6. தௌர் குகை, 7. ஹஜ்ரத் அலி(ரலி) அவர்கள் வீடு, 8. ஹஜ்ரத் அமீர் ஹம்சா (ரலி) அவர்கள் வீடு, 9. பனீ ஹாஷிம் முஹல்லா, 10. ஜன்னத்துல் முஅல்லா– புராதன அடக்கஸ்தலம், 11. மஸ்ஜிதெ ஜின், 12. மஸ்ஜிதெ

## IMPORTANT TELEPHONE NUMBERS - MAKKAH

## முக்கிய தொலைபேசி எண்கள் – மக்கா

1. ஹரம் சரீப் Haram Sharief - 009-662-574-6005
2. மக்கா முகர்ரமா ஹஜ் ஆபீஸ்
   Makkah Hajj Office - 009-662-574-9823
3. மக்கா முகர்ரமா ஹாஸ்பிடல்
   Makkah Muharrama Hospital - 009-662-574-7442
4. இந்திய தூதரகம்
   Embassy of India - 009-661-488-4144
   009-661-488-4691

5. மெடிக்கல் ஆபீசர்
Medical officer - 009-662-0141

6. கிங் அப்துல் அஜீஸ் ஏர்போர்ட்
ஹஜ் டெர்மினல் -
King Abdul Azeez Airort Hajj 009-662-685-8540
Terminal 009-662-685-8550

7. போலீஸ் ஸ்டேஸன் – ஹரம் அருகில்
Police Station (Near Haram) 009-662-534-1165
009-662-575-0200

8. ஹாஸ்பிடல் – ஹரம் அருகில்
Hospital - Near Haram

a) கிங் அப்துல் அஜீஸ் ஹாஸ்பிடல்
King Abdul Azeez Hospital 009-662-5442400

b) நூர் ஹாஸ்பிடல்
Noor Hospital 009-662-5665000

c) ஹீராபொதுமருத்துவமனை
Heera Hospital 009-662-5201604

9. முக்கிய ஹோட்டல்கள் ஹரம் அருகில்
Important Hotels Near Haram

a) ஹில்டன் ஹோட்டல் 009-662-5370277
Hilton Hotel 009-662-5377044

b) மக்கா ஹோட்டல்

Makkah Hotel 009-662-5720500

c) கோஹிர் ஹோட்டல்

Khogheer Hotel 009-662-5733330

d) மிஸ்பலா பேலஸ்

Misfalah Palace 009-662-5747332

10. இந்திய தூதரகம் கேம்ப் மினா 009-662-5572710

Embassy of India Camp Mina 009-662-5523815

11. இந்திய தூதரகம் கேம்ப் அரஃபாத்

Embassy of India Camp Arafat 009-662-5280364

முக்கிய தொலைபேசி எண்கள் – மதீனா

Imortant Telephone Numbers - Madina

1. மஸ்ஜித்–இ–நபவி Masjide Nabavi 009-664-8250888
2. மதீனா முனவ்வரா ஹஜ் ஆபிஸ்
   Madina Munavvara Hajja Office 009-664-8361336
3. மதீனா முனவ்வரா ஹாஸ்பிடல்
   Madina Munavvara Hospital 009-664-8380025
4. போலீஸ் ஸ்டேஸன் –
   Police Station 04-823-0930 009-664-8229373
5. கிங் பஹத் ஹாஸ்பிடல்
   King Fagat Hospital 009-664-8460900

6. மீகாத் ஹாஸ்பிடல் -
Meeqat Hospital 009-664-8237892

7. அல் அன்சார் ஹாஸ்பிடல்
Al-Ansar Hospital 009-664-8361336

8. <u>முக்கிய ஹோட்டல்கள் – மதீனா</u>
Important Hotels - Madinah.

a) ஹில்டன் ஹோட்டல் Hilton Hotel 009-664-8201000

b) மதினா வஃபடா ஹோட்டல்
Madina Wafada Hotel 009-664-8251010

c) லீ மெரிடியன் ஹோட்டல்
Le Meridien Hotel - 009-664-8460777

d) கீரின் பேலஸ் ஹோட்டல்
Green Palace Hotel - 009-664-8269040

e) ஓபராய் ஹோட்டல்
Oberoi Hotel - 009-664-8282222



ஆயிஷா, 13. மஸ்ஜிதெ கைப், 14. மஸ்ஜிதெ நும்ரா, 15. மஸ்ஜிதெ முஜ்தலிபா, 16. மஸ்ஜிதெ இஸ்திராஹா, 17. முர்ஸலாத் குகை, 18. மஸ்ஜிதுல் கபஷ், 19. மஸ்ஜிதெ ஜஃரானா, 20. முஹத்தத் அஃளம், 21. மஸ்ஜிதெ பிலால், 22. மஸ்ஜிதெ உக்பா, 23. மத்ரஸயே ஸல்லதிப்பா.

<u>மதீனா முனவ்வராவில் உள்ள புனித (முக்கிய) இடங்கள்</u>

1. உஹத் மலை, 2. மஸ்ஜிதெ குபா

3. மஸ்ஜிதெ கிப்லதைன், 4. பத்ரு போர் நடந்த இடம், 5. அகழ் யுத்தம் நடந்த இடம் (5 பள்ளிகள்), 6. மஸ்ஜிதெ பளீஹ், 7. மஸ்ஜிதெ

சுக்யா, 8. மஸ்ஜிதெ மஷ்ரபா, 9. மஸ்ஜிதெ உபை, 10. மஸ்ஜிதெ அபூதர் கிபாரி, 11. மஸ்ஜிதெ இஜாபா, 12. மஸ்ஜிதெ பனு னபர், 13. மஸ்ஜிதெ கமாமா, 14. மஸ்ஜிதெ தபாப், 15. ஸல்ஃமலையும் பனீ ஹராம் பள்ளியும், 16. பனீ குரைளா பள்ளி, 17. மஸ்ஜிதெ ஜும்ஆ பள்ளி, 18. ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்களின் கிணறு, 19. பிளாஆ கிணறு, 20. உர்வா கிணறு, 21. உரூஸ் கிணறு, 22. ஷாஹ் பஹத் குர்ஆன் கரீம் காம்ப்ளக்ஸ், 23. ஜாமிஆ இஸ்லாமிய்யா – மதினா பல்கலைக்கழகம்

## இடங்களும் – தூரங்களும்

1. ஹரம் ஷெரீப் To மினா – **5 km**

2. ஹரம் ஷெரீப் To மஸ்ஜிதே ஆயிஷா – **5 km**

3. மினா To அரபா – **17 km**

(அரபா மைதானம் சுமார் 10 சதுர மைல் பரப்பளவுள்ளது)

4. மினா To முஜ்தலிபா – **2 km**

5. அரபா To முஜ்தலிபா – **14 km**

6. மக்கா To மதீனா – **462 km**

7. ஜித்தா ஏர்போர்ட் To மக்கா **72 km**

8. மக்கா To தாயிப் (வழி–அரபா) – **81 km**

9. மக்கா To எலம்லம் – **70 km**

10. மக்கா To ஹுதைபிய்யா– **22 km** (ரிஹால் பலகையின் மீது குர்ஆன் போட்டு வைக்கப்பட்டுள்ள வளைவு)

11. மதீனா To தபூக் – **740 km**

12. மதீனா To கைபர் – **210 km**

13. மதீனா To பதர் – **149 km**

14. மதீனா To துல்ஹுளைபா – **5km** மதினாவின் "மீகாத்துல் ஹுளைபார்" ஆகும் இங்கிருந்து தான் நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டினார்கள்.

<u>அரபு மொழியில் சில முத்துக்கள்</u>

மோயா – தண்ணீர்

ஹலீப் – பால்

லபன் – தயிர்

அன்த – நீ

அன – நான்

மஸ்முக் – உன் பெயர் என்ன?

இஸ்மீ – என் பெயர் முஹம்மது இக்பால்

முஹம்மது இக்பால்

ஈஷ்பலதுக – உன் ஊர் எது?

றீபீயுகீபலதீ அல்ஹிந்த் – என் ஊர் இந்தியா

ஜைன் – நல்லது

தமர் – பேரீத்தம் பழம்

| | |
|---|---|
| ஜிபிமோயா | – தண்ணீர் கொண்டு வா |
| கம் | – எவ்வளவு? |
| கீஃப்(F) | – எப்படி? |
| பாஈத் | – தூரம் |
| கரீப் | – பக்கம் (அருகில்) |
| வப்ன் ருஹ் | – எங்கே போகிறாய்? |
| அரூஹ் அரபா | – அரபா செல்கிறேன் |
| கம் கிலோமித்ர் | – எத்தனை **K.M.** |
| லுகத் | – மொழி |
| ஷீஃப்(F) | – பார் |
| ஹஜர் | – கல் |
| கய்மா | – கூடாரம் |
| கமிஸ் ஸாஅத் | – மணி எத்தனை? |

அஷரதகாயிக் – பத்து மணி
அன்மா அரப் (F)–எனக்கு தெரியாது.
அன அரப்(F) – எனக்கு தெரியும்
ஈதி ஷாயா – டீ கொடு
அவ்காத்துஸ்ஸலாத் – தொழுகை நேரங்கள்
அன்த் அகல்த் – சாப்பிட்டாச்சா?
நஅம் அகல்து – சாப்பிட்டுவிட்டேன்
யௌம் – பகல்
லைல் – இரவு
ஜமல் – ஒட்டகம்
குர்ஸீ – நாற்காலி
தபீப் – மருத்துவர்
இம்லஹ – பணம்
மப்லக் – தொகை
லஹ்ம் – இறைச்சி

| | |
|---|---|
| துஜாஜா | – கோழி |
| சமக் | – மீன் |
| கலன்சுவத் | – தொப்பி |
| கிமார் | – முக்காடு |
| அபா | – தோப்பு |
| கமீஸ் | – சட்டை |
| இஸார் | – வேஷ்டி |
| ஸஹப் | – தங்கம் |
| கலம் | – பேனா |
| ஹுஜ்ரா | – அறை |
| வரக் | – பேப்பர் |
| கல்லி | – தெரு |
| கித்மத் | – சேவை |
| தாம் | – விருந்தளித்தல் |
| கலாம் | – அன்பாக பேசுதல் |
| இதாத் | – அடிபணிதல் |
| ஷவ்க் | – ஆசை |

# அரபு மொழியில் சில வாக்கியங்கள்

1. எத்தனை உம்ரா பண்ணி உள்ளீர்கள்?
   கம் உம்ரத்தன் இஃதமர்த?
2. எந்த டிராவல்ஸ் மூலம் வந்தீர்கள்?
   மின் அய்யி ஜிஃத டிராவல்ஸ்
3. உங்கள் உறவினர் ஹஜ் வந்துள்ளார்களா?
   ஹல் மஅக அஹதுன் அக்ரிபாயிக
4. எந்த ஹோட்டலில் தங்கியுள்ளீர்கள்?
   அய்யு மகஸ்த புன்துக்?

5. இன்ஷா அல்லாஹ் ஊருக்கு எப்போது ப்ளைட்?
மதா தஸ்ஹபு பலதக தாயிர்

6. என்ன படிச்சிருக்கீங்க?
மாதா தஃலீமுக

7. என்ன தொழில் பண்ணுறீங்க?
மாதா ஷுக்லுக

8. எத்தனை குழந்தைகள்?
கம் அவ்லாத்

9. மதீனாவுக்கு எப்போது போகிறீர்கள்?
மதா தக்ருஜு மதீனா

10. கிளைமேட் எப்படி உள்ளது?
கய்ப் ஹவாலுக

## அரபாத்தில் செய்ய வேண்டிய அமல்கள்

1. பிஸ்மில்லாஹ்வுடன் சூரே இக்லாஸ் (குல்ஹூவல்லாஹூ சூரா) நூறு விடுத்தம்.
2. சலவாத் நூறு விடுத்தம்.
3. மூன்றாம் கலிமா நூறு விடுத்தம்.
4. நான்காவது கலிமா நூறு விடுத்தம்.
5. இஸ்திஃபார் நூறு விடுத்தம்.

## சாந்த நபிகளாருக்கு ஸலாம்

اَلسَّلَامُ عَلَيْكَ يَا رَسُوْلَ اللّٰهِ اَلسَّلَامُ عَلَيْكَ يَا حَبِيْبَ اللّٰهِ اَلسَّلَامُ
عَلَيْكَ يَا خَيْرَ خَلْقِ اللّٰهِ اَلسَّلَامُ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ

அஸ்ஸலாமு அலைக்க யாரஸுலுல்லாஹ்
அஸ்ஸலாமு அலைக்க யாஹபீபல்லாஹ்
அஸ்ஸலாமு அலைக்க யாஹைரஹல்கில்லாஹ்
அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன்நபிய்யு
வரஹ்மத்துல்லாஹி வபரக்காத்துஹூ

28/10/10 (Pirai-20) Went to Haj



22/11/10 (Pirai-16) (Returned from Haj)

24. இந்த இடத்தின் சிறப்பு என்ன?
மாதா பழாயிலு ஹாதல் மகான்

25. தவாப் செய்ய போகலாமா?
ஹல் நதூபு

26. ஆம் போகலாம்
நஅம் – நஹ்னு நதூபு

27. இப்ப தான் போனேன்
அல்ஆன்

28. உமக்கு நன்றி
ஹுக்ரன் லக்.